# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



“ஜாலியா போராடணும்!”

KI ● 07.03.2010 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்





பப்ளிக் எக்ஸாம்
கச்சேரி!

தாங்க முன்னேற
தன்கொடை எதுக்கு?

பாஸிட்டிவ் அந்தோணி!

ட்க்'குன்னு உன்னை
டிக்' பண்ணு!

யமுன்னேற்றச்
சிறப்பிதழ்



# சிறுநீர் கசிவு பிரச்னையா?

இன்னும் ஏன் தயக்கம்?

"நீங்கள் அணுக வேண்டிய சிறப்பு மருத்துவர்

## UROGYNECOLOGIST

இருமினாலோ,
தும்மினாலோ

சிறுநீர் கசிவு
ஏற்படுகிறதா?

## "சிலிங் சிகிச்சை"

"வலியில்லாமல், இரத்தக் கசிவில்லாமல் ஒரே நாளில் வீடு திரும்புங்கள்". அமெரிக்காவில் UROGYNECOLOGY FELLOWSHIP பட்டம் முடித்த மருத்துவர்கள் உள்ள இந்தியாவில் முதல் ISO 9001:2000 Certified சிறப்பு மையம்

**இப்போது கோவையில்**

**பாலா மெடிக்கல் சென்டர்
அண்டு ஆஸ்பிட்டல்,**

901, திருச்சி ரோடு,
இராமநாதபுரம்,
கோயம்புத்தூர் 641 045.
0422-2323456, 2323333

தங்கள் பிரச்னையை மேற்படி மையத்திலுள்ள முறையான பயிற்சி பெற்ற நபரிடம் தொலைபேசியில் தெரிவித்து கவுன்சலிங் அல்லது ஆலோசனை பெறலாம். ஆலோசனைக்குக் கட்டணம் எதுவும் கிடையாது!

**GUNA ASSOCIATES IN UROGYNECOLOGY & RESEARCH FOR INCONTINENCE (GAURI)**

1, Crescent Park Street, T.Nagar, Chennai - 600 017. Ph : 24341055, 24322591
E-mail : gunasek@gmail.com Web : www.urogynecology.in

## கிரேஸியைக் கேளுங்கள்

# பேரர்... சர்வர்... வெயிட்டர்!



● ஆர்.அஜிதா, கம்பம்

***தமிழ்நாட்டைப் பிரித்து 'கிரேஸி மாநிலம்' அமைத்தால் எப்படி இருக்கும்?***

குலுங்கக் குலுங்கச் சிரிப்பாய்ச் சிரிக்கும் 'குலுங்கானா.'

● ஸ்ரீகலா, நெய்வேலி

***சுய முன்னேற்றத்துக்குச் சிறந்த வழி என்னவோ?***

பிறர் முன்னேற்றத்தைப் பாராதிருத்தல்! எனது பள்ளி வாத்தியார் ஏ.சுப்பிரமணியம் கூறியது இன்னமும் என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. 'தவறு – பிறர் மீது பொறாமைப்படுதல்...', 'தப்பு- பிறர் நம்மைப் பார்த்துப் பொறாமைப்படும்படி நடத்தல்....!'

● எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

***இறந்தவரின் நெற்றியில் நாணயத்தை வைப்பது ஏன்?***

உயிரைச் சுமந்த 'பேரர்' உடலுக்கு டிப்ஸ். இதுநாள்வரை உயிரைக் கொடுத்து சர்வ் செய்த 'சர்வர்' உடலுக்கு டிப்ஸ். உயிர் போகும் வரை வெயிட் செய்த 'வெயிட்டர்' உடலுக்கு டிப்ஸ்!

● ச.ராஜசேகர், செய்யாறு

***பேயைக் கண்டு பயப்படுதலுக்கு 'பாஸ்மோபோபியா' என்று பெயர். அதுபோல மனைவியைக் கண்டு பயப்படுபவர்களுக்கு என்ன பெயர் வைக்கலாம்...?***

மனைவியைக் கண்டு பயப்படுதல் 'போபியா' அல்ல! பலருக்கு அதுதான் பர்மனெண்ட் 'ஜாப்'யா. வேறு சிலர் 'ஹாபியா' பயப்படுவதுபோல நடிப்பார்கள்.

● அ.யாழினி பர்வதம், சென்னை

***இடி இடிக்கும்போது 'அர்ஜுனா அர்ஜுனா' என்று சொல்வதேன்?***

இடிக்குக் காரணமான ஆக்ஷன்-கிங்,

அர்ஜுனனின் தந்தை இந்திரன். இந்த இந்திரத் தந்தைக்கு 'மகன் சொல் மிக்கதோர் மந்திரமில்லை..!'



● ரா.பிரசன்னா, மதுரை

***தன்னை உணர்ந்து பேசுவதற்கும், தன்னை மறந்து பேசுவதற்கும் என்ன வித்தியாசம்?***

தன்னை உணர்ந்தவன் பேச்சு போதனை; தன்னை மறந்தவன் பேச்சு 'போதை'னை!

● வரத.சண்முக சுந்தர வடிவேலு, வாழப்பாடி

***தலைகுனிவது பணிவா...? வெட்கமா...?***

ஹெட்-வெயிட் ஜாஸ்தியானாலும் பாரம் தாங்காம தலைகுனிவு ஏற்படும்!

● பா.அசோக், விருதுநகர்

***இலக்கணம் மீறிய கவிதை ஒன்று கூறுங்களேன்?***

'அப்பாவோ ஆசிரியப்பா பிறந்ததோ
தப்பாக பிள்ளைத் தமிலாம் - எப்பொழுதும்
வாத்தியார் பிள்ளையிவன் வாலைப் பலமென்பான்
தோத்ததே தொல்காப் பியம்..!''

● சௌந்தரி ஸ்வீட் முருகன், கொல்லப்பட்டி

***அதிகாலையில் நீங்கள் விரும்பும் ராகம் எது?***

ஆ(த்)தி தாளம் போட்டபடி சுடச்சுட 'காபி' ராகம்!

● அ.ஷண்முகசுந்தரம், பெங்களூர்

***ஏழாவது அறிவு எது?***

ஆறாவது அறிவுக்கு எட்டாத அறிவு ஏழாவது அறிவு! ○


**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: **லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

**ஆசிரியர் குழு :**
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

**விளம்பரப் பிரிவு :**
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

**சந்தா பிரிவு :**
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

**விற்பனை பிரிவு :**
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
**www.kalkionline.com**

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
**www.sangapalagai.com**

**சந்தா விவரம் (ஒரு வருடம்) :**
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

''பொன்னான வாழ்வே மண்ணாகிப் போனால் துயரம் நிலைதானா - பாட்டின் வரிகளை நீங்க ரசித்திருப்பீங்க... அந்த வரியின் அர்த்தமாகவே எங்க வாழ்க்கை இருந்ததால தேம்பித் தேம்பி அழுதிருக்கோம். பொன்னான வாழ்வு தான்... ரொம்ப வசதியா இருந்தோம். திடீரென அப்பாவுக்கு ஹார்ட் அட்டாக். அப்பா பிஸினஸுக்கு வாங்கிய கடன் சூழ்ந்துவிட, எங்க சொத்தும், சந்தோஷமும் மண்ணாகிப் போச்சு. துயரம் சூழ ஆரம்பிச்சது. ஆனாலும் நாங்க அசரல!'' என்று சொல்லும் ஷோபனா, கோவையின் பரபரப்பு நிறைந்த காந்திபுரம் கிராஸ்கட் ரோடு பிளாட்ஃபாரத்தில் தம்பியோடு சேர்ந்து பிளாஸ்டிக் பொம்மை விற்கும் ஐ.டி.ஸ்டூடன்ட்.

ஆமாங்க! கோவை சங்கரா இன்ஸ்டிட்டியூட் ஆஃப் டெக்னாலஜியில் பயிலும் இந்த மாணவி, தமது மாலைநேரப் படிப்பைக் கூட பிளாட்ஃபாரக் கடையிலேயே சாலையோர வெளிச்சத்தில்தான் தொடர்கிறார்.

'எதுக்கு இந்தக் கடை'ன்னு ஐயத்தோடு ஆரம்பிச்சதும்... ''அப்பா போன பின் சொந்தமா ஒரு வீடு மட்டும் இருந்தது. அப்போ தான் எனக்கு இதயத்துல கோளாறு... உடனே ஆபரேஷன் பண்ணனும்னு சொல்லிட்டாங்க. வீட்டை வித்து ஆபரேஷன் முடித்தோம். இப்போ வாடகை வீடு! 'கொடிது கொடிது இளமையில் வறுமை'-ன்னு பாடியிருக்காங்க இல்ல... அதை அனுபவிச்சோம். என் மருத்துவச் செலவுக்கு மட்டும் மாசம் மூவாயிரம் வேணும். தம்பி கார்த்திக் வீடு வீடாகச் சென்று புடைவை, ஜாக்கெட் விற்பான். என்சைக்ளோபீடியா புத்தகங்கள் வித்துட்டு வருவான். அப்பா மாதிரியே நான் படிச்சு பெரிய ஆளா ஆகணும்னு கனவு கண்டு எனக்காக அப்பா மாதிரி உழைக்கிறான். இப்போ இந்தக் கடையை நடத்துறான். அம்மா இப்போ பெட்ரோல் பங்க் வேலைக்குப் போறாங்க.

'பிச்சைப் புகினும் கற்கை நன்றே'ன்னு படிச்சிருக்கோமே தவிர, பிச்சை எடுக்கலே... உழைக்கிறோம்; வெட்கம் பார்க்




● விற்பனையும் படிப்பும்



✱ அம்மா, தம்பியுடன்...

காம. படிக்கிறோம்... எப்படியும் ஜெயிச்சுடுவோம்னு நம்பிக்கையில... ஒவ்வொரு பாடமா எக்லாம் எழுதி முடிச்சு இப்போ தம்பிகூட எஸ்.எஸ்.எல்.சி. முடிச்சுட்டான். நைட் ஷிஃப்ட் முடிச்சுட்டு அம்மா கொஞ்ச நேரம் கடையைப் பார்த்துப்பாங்க. நானும் தம்பியும் 6.30 மணியிலிருந்து இங்கே வந்து வியாபாரம் பார்ப்போம். 9.30க்கு காலேஜுக்கு ஓடுவேன். திரும்பவும் 5.30லிருந்து 11.30 மணி வரை பிளாட்ஃபாரக் கடையில நானும் தம்பியும். ஹோம்வொர்க்கெல்லாம் இங்கேயேதான். எங்க நிலைமையைப் பார்த்து கல்லூரி நிர்வாகம், 'கட்டணம் செலுத்த வேண்டாம்'னு அறிவிச்சு இருக்கு. என் மெடிக்கல் செலவு, குடும்பச் செலவு, வீட்டு வாடகைக்கு... இப்படி உழைச்சாத்தான் முடியும்'' என்கிறபோது... ஷோபனாவுக்கு மூச்சு வாங்குகிறது... தம்பி கார்த்திக் பதறிக்கொண்டு 'என்னக்கா' என்று ஓடி வருகிறான். 'ஒண்ணுமில்லப்பா' என்று சொல்லிவிட்டு, இன்னொரு கஸ்டமருக்கு பொம்மையைக் கொடுத்துவிட்டு, ''ஹார்ட் ஆபரேஷன் செஞ்சிருக்கேன் இல்லையா? அடிக்கடி இப்படி வருது ஸார்... ஒண்ணு மட்டும் நிச்சயம் ஸார்... இழந்த அந்தப் பொன்னான வாழ்வை எப்படியும் திரும்பவும் மீட்டுடுவோம்னு அசராத நம்பிக்கையிருக்கு... நாங்க ஜெயிச்சுடுவோமில்லே'' என்று கேட்கிறார் ஷோபனா. கண்கள் கலங்குகின்றன.

''இப்படை தோற்கின் எப்படை வெல்லும்?'' காலம் மகா கருணையுள்ளது'' என்றோம் உணர்ச்சி மல்க. அயராத உழைப்பும், விடா முயற்சியும் நிச்சயம் இந்த இலையுதிர் காலத்தை விரட்டிவிட்டு வசந்த காலத்தின் வளமையை வாசலுக்குக் கொண்டு வரும் என ஆத்மார்த்தமாக வாழ்த்தி விட்டுக் கிளம்பினோம்.

சந்திப்பு, புகைப்படம் :
**ஆர்.பாலா**



✱ ஷோபனா

# via ப்ளாட்ஃபார்ம்!

''தமது உடலை மருத்துவ ஆராய்ச்சிக்கு ஒப்படைக்க வேண்டும்'' என்று குறிப்பு எழுதிவிட்டுக் காணாமல் போன வரதராஜன், அழுகிய நிலையில் உடல் கிடைக்கும்படியாகவா மரணத்தைத் தேடிக் கொண்டிருப்பார்? தவிர சமூகத்துக்காகவே தம் வாழ்க்கையை அர்ப்பணித்த உ.ரா., பொதுமக்கள் பயன்பாட்டில் இருக்கும் ஒரு ஏரியை மாசுபடுத்தும் வகையில் தம்மை மாய்த்துக் கொள்ளமாட்டார்'' என்று நம்மிடம் கண்கள் கலங்கச் சொன்னார் ஒரு மார்க்ஸிஸ்ட் தோழர். ஒரு சிவப்புத் தோழரின் கறுப்பு முடிவு, மார்க்ஸிஸ்ட் தோழர்களை மட்டுமல்லாமல், கட்சிக்கு அப்பாற்பட்டவர்களையும் நிறையவே பாதித்துள்ளது.

ரிசர்வ் வங்கியில் பணியாற்றிய நங்கநல்லூர் பிராமண இளைஞர் வரதராஜன், காதல் கலப்புத் திருமணம் செய்தபோது, ''உண்மையிலேயே முற்போக்குதான்'' என்று சுற்றுவட்டாரம் வியந்தது. தமது தமிழ்ப்பற்றுக்கு உரம் சேர்க்கும் விதமாக ம.பொ.சி.யின் தமிழரசு கட்சியில் ஈடுபாடு காட்டி வந்தார் உ.ரா. ஆனால், அவரது வேகத்துக்கு ஈடுகட்ட அந்த இயக்கத்தால் முடியவில்லை. இன்னும் பரந்துவிட்ட தளத்தில் தம் பங்களிப்பைச் செய்யவேண்டும் என்ற ஆர்வத்தில், வங்கி தொழிற்சங்க நடவடிக்கைகளில் பங்குகொண்டு வந்தவரை மிகவும் கவர்ந்தவர் மறைந்த வி.பி. சிந்தன். அவரது வழிகாட்டுதலில் மார்க்சிஸ்ட் இயக்கத்தில் நடைபோட்ட உ.ரா.வுக்கு 1989 திருப்புமுனை ஆண்டு. சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, சிறப்புடன் பணியாற்றினார் உ.ரா. ஆனால் 1991 தேர்தலில் தோல்வியும் அடைந்தார். பின்னி தொழிலாளர் வேலை நிறுத்தத்தின் போது உறக்கம் இல்லாமல் ஓடியாடிப் பாடுபட்ட உ.ரா.வை, இன்றும் நினைவில் வைத்துப் போற்றுகிறார்கள் தோழர்கள்.

தில்லியிலிருந்து தமிழகத்துக்கு வந்த உ.ரா.வுக்கு, கட்சிப் பத்திரிகையாக 'தீக்கதிரை'ப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பு கொடுக்கப்பட்டது. அந்தப் பத்திரிகை காலத்துக்கேற்ப புதுப்பொலிவுடன் வெளிவரப் பாடுபட்டவருக்கு, கட்சியின் மத்திய கமிட்டி உறுப்பினர் பொறுப்பும் சில வருடம் பணிபுரிந்தபின் தேடி வந்தது.



உ.ரா. வரதராஜன்

''கட்சியின் அடுத்த மாநிலச் செயலாளர் உ.ரா.தான்'' என்று அவரது நெருங்கிய தோழர்கள் மிகவும் நம்பிக்கையுடன் சொல்லி வந்தார்கள்.

ஆனால் உ.ரா.வுக்கு அந்த வாய்ப்பு கிடைக்கவில்லை. அவர் மீது 'நடத்தை குறித்த குற்றம்சாட்டப்பட்டு, கொல்கத்தாவில் நடந்த கூட்டத்தில் கட்சியின் எல்லாப் பொறுப்புகளில் இருந்தும் தற்காலிகமாக நீக்கிவைக்கப்பட்டார். துடித்துப் போனார் உ.ரா. ''உட்கட்சிப் போராட்டத்தில் எத்தனையோ இடர்களை என்னால் எதிர்கொள்ள முடிந்திருக்கிறது. ஆனால் உள் வாழ்க்கைப் போராட்டத்திலோ நான்

நிலைகுலைந்து வீழ்ந்துவிட்டேன்'' என்கிறது அவரது கடைசிக் குறிப்பு. இடையில் என்ன நடந்தது?

குடும்பத்தில் ஏற்பட்ட குழப்பம் கட்சி மட்டத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டு, விசாரணை செய்து, பின்னரே நடவடிக்கை எடுக்கப்பட்டது என்றும் சொல்கிறார்கள். ஆனால் இப்படியொரு புகாரைக் கட்சி மட்டத்துக்கு எடுத்துச் செல்ல சிலர் தூண்டியதாகவும், அதற்குப் பின்னால், ''உ.ரா.வை மாநிலச் செயலாளராக வர விடக்கூடாது'' என்ற நோக்கம் இருந்ததாகவும் கூடச் சொல்கிறார்கள்.

முதலில் தவறுகளைச் சுட்டிக்காட்டி, திருத்திக் கொள்ள வாய்ப்புக் கொடுக்கவேண்டும் என்பதே கட்சியின் நோக்கம். கடும் மனஉளைச்சலுக்கு ஆளாகும் வகையில் உ.ராவைப் பொறுப்பிலிருந்து நீக்கியது தான் அதிர்ச்சியாக இருந்தது'' என்கிறார் ஒரு மூத்த இயக்கத் தோழர்.

''இதுபோன்ற குற்றச்சாட்டில் தஞ்சாவூரைச் சேர்ந்த ஒன்றியப் பொறுப்பாளரே ஒருமுறை நீக்கப்பட்டார். கட்சி விரோத நடவடிக்கைக்காக, சோம்நாத் சாட்டர்ஜி போன்றவர்களையே நீக்கக் கட்சி தயங்கியதில்லை'' என்றார் மற்றொரு தோழர்.

# உறங்கும் உண்மைகள்!

கடைசிக் குறிப்புகளை எழுதி வைத்துவிட்டுக் காணாமல் போனார் உ.ரா. என்ற தகவல் கேள்விப்பட்டு, இரண்டு மூத்த மார்க்ஸிஸ்ட் பிரமுகர்களைத் தொடர்பு கொண்டோம். ''நாங்கள் மிகவும் கவலையில் இருக்கிறோம். ஆனால், கட்சி ஒரு நடவடிக்கை எடுத்தால், அது முழு விசாரணைக்குப் பின் எடுக்கப்பட்ட ஒரு முடிவாகத்தான் இருக்கும்'' என்றார்கள் அவர்கள். ''உ.ரா. மீது சொல்லப்பட்ட குற்றச்சாட்டு உண்மையாகவேகூட இருக்கும்பட்சத்தில் அது ஒருவருடைய தனிப்பட்ட விவகாரம் ஆயிற்றே; கட்சி ஏன் இதில் தலையிட வேண்டும்?'' என்றும் சில நடுநிலையாளர்கள் கேட்கிறார்கள்.

''தமது தவறான நடத்தையின் காரணமாகக் கட்சிக்கு அவப்பெயர் ஏற்படுத்தும் வகையில் ஒருவர் நடந்து கொண்டால், புதிதாகப் பொறுப்பேற்ற மாநிலச் செயலாளர் ராமகிருஷ்ணனுக்கு தொடக்கத்திலேயே சங்கடமான சூழல்.

சில மாதங்களுக்கு முன்னர் மறைந்த மார்க்ஸிஸ்ட் பாராளுமன்ற உறுப்பினர் மதுரை மோகன் குறித்து எழுதுவதற்காக அவருடன் பழகிய மதுரை தோழர்களின் தொலைபேசி எண்களைக் கொடுக்குமாறு உ.ரா.விடம் கேட்டோம். ''அவரைப் பற்றிச் சிறப்பாக எழுதுங்கள். அவர் ஒரு பிறவி (Born) கம்யூனிஸ்ட்'' என்றார் உ.ரா. நாம் கொஞ்சம் உரிமையுடன், கிண்டலடிக்கும் வகையில் ''அப்ப நீங்க Poster (வளர்ப்பு) கம்யூனிஸ்டா?'' என்றோம். அப்போது உ.ரா. சிரித்த சிரிப்பு இன்னமும் காதுக்குள்.

**- ப்ரியன்**

# எல்லாம் தெரிந்தவன்

ஆர்.ஆர்.தமன்

அந்தப் பிரபல தொலைக்காட்சி, தொழிலதிபர் துரைசாமியுடன் ஒரு நேருக்கு நேர் நிகழ்ச்சியை ஏற்பாடு செய்திருந்தது. நிகழ்ச்சித் தொகுப்பாளர் பேசலானார்.

'திரு துரைசாமியைத் தெரியாதவர் இருக்க முடியாது. பிரபல தொழிலதிபர் என்பது அவருடைய ஒரு முகம்தான். இவருக்குப் பன்முகங்கள் உண்டு. எந்த விஷயத்தையும் ஒருமுறை படித்தாலோ கேட்டாலோ மறக்கவே மாட்டார். அபார ஞாபக சக்தி! இவருக்கு ரவா தோசை செய்யவும் தெரியும். ராக்கெட் தொழில் நுட்பமும் தெரியும். பாப் மியூசிக், பாரம்பரிய கர்னாடக சங்கீதம், அரசியல், ஆன்மிகம் அனைத்தும் அறிவார். மொத்தத்தில் 'ஆல் இன் ஆல்'. இதன் காரணமாக பல துறைகளில் இவர் குரூப் கம்பெனிகள் கொடி கட்டிப் பறக்கின்றன. சொல்லப் போனால், இவருக்குத் தெரியாதது - 'தெரியாது' என்ற வார்த்தைதான் என்றால் மிகையாகாது. ஏழ்மையான குடும்பத்தில் பிறந்து பள்ளிக் கட்டணம் கட்ட முடியாததால் படிக்க முடியாமல், கோபத்துடன் சிறு வயதில் ரெயிலேறி சென்னை வந்தவர், இன்று பில்லியனர் என்றால் நம்ப கஷ்டமாகத்தானிருக்கும். ஆனால், அதுதான் உண்மை. இனி இவரிடம் உங்கள் அறிவியல் கேள்விக்கணைகளைத் தொடுக்கலாம். நன்றி!''

'கேள்வி - பதில் நிகழ்ச்சி' முடியும் போது இரவு ஒன்பதே முக்கால்.

காரை நோக்கி வேகமாக நடந்த துரைசாமியை வழிமறித்தார் ஒரு பெரியவர்.

''சாமி, மன்னிக்கணும். கிராமத்துலேருந்து குடும்பத்தோடு வந்தோம். எங்க பாப்பா ஒரு மியூசிக் ப்ரோகிராம்ல கலந்துக்கிச்சு. லேட்டாக்கிட்டாங்க. 'எம்ஜியார் நகர்'ல உறவுக்காரவங்க வீட்டுக்குப் போய்த் தங்கணும். அங்கிட்டு என்ன பஸ் போகுமுங்க?''

'ஏ.ஸி.காரவான்' மற்றும் விமானத்திலேயே பயணம் செய்யும் துரைசாமிக்கு, பஸ் ரூட் எப்படித் தெரியும்? எனினும் 'தெரியாது என்ற வார்த்தையே தெரியாதவர்' என்ற பட்டத்தை வாங்கிய கொஞ்ச நேரத்திலேயே இப்படி ஒரு சோதனையா? துவண்டு போனவர் சமாளித்துக்கொண்டு ''லேட்டாயிடுச்சு, பஸ் எல்லாமிருக்காது. என் காரில் போயிடுங்க. டிரைவர், இவங்க எங்க போகணுமோ அங்க பத்திரமா விட்டுட்டு வா. நான் ஒரு சேஞ்சுக்கு ஆட்டோவில் வீட்டுக்குப் போறேன்'' என்றபடி நடந்தார் நிம்மதிப் பெருமூச்சுடன்.



# SRIMATHI SUNDARAVALLI MEMORIAL RESIDENCY

## "SUBHASHRAYA" - A HOME FOR ELITE SENIOR CITIZENS

**CHENNAI - 600063**

**Heaven On Earth**





## RIGHT PLACE FOR ELDERS



Spiritualism



Peace



Honour



Comfort



Luxury



Health

*With the Heart to Serve*

*We Welcome you*

Moppedu Road, Alapakkam, New Perungalathur, Chennai-600063

Phone No : 044-2279 2002-04 Fax : 044-2279 2009

E-mail : ssmeto@dataone.in Website : www.ssmhome.in

இன்றைக்குப் புத்தகச் சந்தையில், உலகம் முழுக்க அதிக அளவில் விற்பனையாகிக் கொண்டிருப்பது சுயமுன்னேற்ற நூல்களே. சுயமுன்னேற்றம் அடைய வேண்டும் என்பது எல்லா மனிதருக்குள்ளும் கனன்று கொண்டிருக்கும் தீப்பொறி எண்ணம்!

அந்தத் தீப்பொறி, வெகு சிலரின் வாழ்க்கையில் மட்டும் தீபமாய் எரிந்து தனக்கும், உலகத்துக்கும் வெளிச்சம் காட்டுவதாக இருக்கும். சிலரின் வாழ்க்கையில் காட்டுத் தீயாய் எரிந்து எல்லோரையும் தன் பக்கம் திரும்பிப் பார்க்க வைத்துப் பின்பு கருகி அடங்கிவிடும். பெரும்பாலானோர்க்கு, வாழ்க்கை ஓட்டத்தில் அந்தப் பொறியைத் தீபமாகவோ, காட்டுத் தீயாகவோ மாற்ற முடியாத காலகட்டத்தில் 'நேரம்', 'மச்சம்', 'அதிர்ஷ்டம்', 'தலையெழுத்து' என விரக்தியில் சமாதானம் ஆகிக்கொள்வதுமாகவும் அமைந்து விடுகிறது. ஏன்?

# தீபம் VS காட்டுத் தீ!

உளவியல்ரீதியாக ஆராய்ந்தோமேயானால், ஒரு தனி மனிதனுக்கு 'சுயம்', 'முன்னேற்றம்' ஆகிய இரண்டில் ஏதேனும் ஒன்றின் வளர்ச்சியில் தடையோ, குழப்பமோ ஏற்படும்போதுதான், சுயமுன்னேற்றம் குறித்துச் சிந்திக்கவும் தேடவும் ஆரம்பிக்கிறான்.

சுயம் குறித்த குழப்பமும், தேடலும் எல்லோருக்கும் ஏற்படுவதில்லை. ஒரு விதப் பதற்ற சுபாவம் கொண்டவர்களே அத்தகைய தேடலில் ஈடுபடுவதாக அனுபவங்களும், ஆராய்ச்சிகளும் தெரிவிக்கின்றன.

ஆகையினால், வறுமையும் தோல்வியும் வலிகளும் மட்டுமே ஒருவனுடைய சுயத்தைத் தேடத் தூண்டுவதில்லை. அது அவனுடைய சுபாவத்தைப் பொறுத்தது

கடன் பிரச்னையால், காதலில் தோல்வியால், பரீட்சையில் ஃபெயில் ஆனதால் சிலர் தற்கொலை செய்துகொண்டதாகத் தினம் தினம் ஊடகங்களில் செய்திகளைப் பார்க்கிறோம்.

ஆனால், உளவியல் அறிவியல் (Psychological science) அதை எப்படி நோக்குகிறது தெரியுமா?

'தற்கொலை எண்ணம்' (Suicidal thought) 'தற்கொலை முயற்சி' (Suicidal attempt) 'தற்கொலை' (Suicide) - இவை எல்லாம் மனநலப் பிரச்னைகளின் வெளிப்பாடு என்றே கருதுகிறது.

கடன், காதல் தோல்வி, பரீட்சையில் தோல்வி போன்ற சூழ்நிலைக் காரணிகள் தாம் தற்கொலையைத் தூண்டியது போலத் தோன்றினாலும், அது ஒரு மாயத் தோற்றமேயன்றி முழுமையான உண்மை கிடையாது.

எப்படி?

ஒருவனுடைய அப்பா, 'நாயே வீட்டை விட்டு வெளியே போ! பத்தாவது பாஸ் பண்ண முடியலை. உனக்கு இந்த வீட்ல இடம் கிடையாது' என அடித்து விரட்டுகிறார். அவன் வீட்டை விட்டு வெளியேறி அடுத்த பத்தாண்டுகளில் அதே அப்பா 'எனது பிள்ளை' என ஆனந்தக் கண்ணீரோடு மெச்சுமளவுக்கு வளர்கிறான்.

மாறாக, அவனுடைய நண்பனின் அப்பா, "தம்பி! கவலைப்படாதே. பரீட்சையில் தோல்வி அடைந்துவிட்டதால் வாழ்க்கையே வீண் என்று அர்த்தம் இல்லை. அடுத்த முறை பார்த்துக் கொள்ளலாம். ஒருவேளை படிக்காட்டி கூட இந்த உலகத்

**டாக்டர்.பி.ஆனந்தன்**

துல முன்னேற எவ்வளவோ வழிகள் இருக்கு'' என்று சமாதானம் சொல்கிறார். ஆனால் அவன் அன்று இரவே தற்கொலை செய்துகொள்கிறான்!

எனவே, தற்கொலைக்கான காரணம் தோல்வியாகத் தெரிந்தாலும், உண்மை என்னவென்றால், தோல்வி ஒரு தனிமனிதனின் மனத்தில் எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்துகிறது என்பதும், தோல்வி எனும் விஷயத்தை அவனது மனம் எப்படிப் பார்க்கிறது என்பதும்தான். ஒரே விஷயம் இரு எதிரெதிர்த் தாக்கங்களை மனத்தில் ஏற்படுத்துகிறது என்றால், அந்த விஷயத்தை விட, அந்த விஷயத்தைத் தாங்கிய மனத்



தின் இயல்பு மிகவும் முக்கியமானதல்லவா? காரியத்தை விடக் காரணம் முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டியதல்லவா?

ஒரு மனிதனின் மனம் பலமாகவோ, பலவீனமாகவோ, ஆரோக்கியமாகவோ, நோய்வாய்ப்பட்டோ இருப்பது இரண்டு முக்கிய காரணிகளைச் சார்ந்தது.

ஒன்று Nature. இயற்கையில் மரபணுக்கள் ரீதியாக மனத்தின் தன்மை. மற்றொன்று Nurture. அனுபவம், வளர்ப்பு, கல்வி, பொருளாதாரம் போன்ற சூழ்நிலைக் காரணிகள், பல ஆண்டுகளில்




மனத்தில் ஏற்படுத்தும் தன்மைகள்.

ஐம்பதாண்டுகளுக்கு முன்பு வரை, Nurture என்று சொல்லக்கூடிய சமூகக் காரணிகளையே பிரதானப்படுத்தி உளவியல் ஆராய்ச்சியாளர்கள் பேசினர். ஆகையினால் குழந்தைப் பருவத்தில் பிஞ்சு மனத்தில் ஆழமாகப் பாதித்த விஷயம், அப்பா தினமும் குடித்துவிட்டு வந்து அடித்தது, சித்தியால் கொடுமைப்படுத்தப்பட்டது போன்றவை, அவனுடைய மனத்தில் தாக்கத்தை ஏற்படுத்தியதாகவும், அதை ஹிப்னாடிசம் செய்து ஆழ்மனத்தில் சென்று பிரச்னைக்குத் தீர்வு காண்பதாகவும் சினிமாக்களும், நாடகங்களும் சித்திரித்தன.

ஆனால், இன்றைக்கு சாட்டிலைட், செல்ஃபோன், கணினி என எல்லாவற்றிலும் வளர்ந்த அறிவியல், உளவியலிலும் வளர்ந்து விட்டது. ஐம்பதாண்டுகளுக்கு முன்பு சொல்லிவந்த கூற்றை ஏறக்குறைய தலைகீழாகப் புரட்டிப் போடுமளவுக்கு Nature என்று சொல்லக்கூடிய மரபணு (Biological - Genetic) காரணிகளையே முக்கியமானதாகக் கூறுகிறது.

ஆகையினால், இன்றைக்கும் ஒருவர் ஆழ்மனம், மெஸ்மரிசம் - ஹிப்னாடிசம் என்றெல்லாம் பேசுகிறார் என்றால், ஒன்று அவர் அறிவியலை அப்டேட் செய்து கொள்ளவில்லை அல்லது பணத்துக்காக ஏமாற்றுகிறார் என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

**ந**ண்பர்களே!

சுயமுன்னேற்றம் பலருக்கு அலமாரியில் அடுக்கி வைத்திருக்கும் புத்தகங்களோடும், பகற்கனவோடும் முடிந்து விடக் காரணம்... எதையாவது சாதிக்க வேண்டும் என்பதாகவும், எதைச் சாதிக்க வேண்டும் என்ற இலக்கில் உறுதியாக இல்லாமல் இருப்பதும், இலக்கை நிர்ணயித்த பிறகு அதற்கான தகுதி, திறமைகளை ஆராய்ந்து தெரிந்து கொள்ளாததுமேயாகும்.

பலம் - பலவீனம், தகுதி - திறமை போன்றவற்றை மரபணுக்களாகிய நம் மூதாதையர்களின் வாழ்க்கைப் பாடத்திலிருந்தும், நம்முடைய கடந்தகால அனுபவங்களிலிருந்தும் தெளிவாகக் கற்க வேண்டும். அதோடு, கடின உழைப்பு, விடாமுயற்சி, தேவைப்பட்டால் உளவியல் ஆலோசனை பெற்றுக்கொண்டு முனைந்தோமேயானால் சாதிக்கலாம். மாறாக, வெற்றி பெற்றவர்களின் வாழ்க்கையை மட்டுமே தினமும் அசைபோட்டுப் பகற் கனவு காண்பது விரக்தியையே பரிசாகத் தரும்! ●

இந்தியாவிலேயே கயிலாய யாத்திரையை மட்டுமே 12 ஆண்டுகளாக, யாரும தர இயலாத குறைவான கட்டணத்தில் 15 நாட்களிலும் அதிக சலுகையுடன் நவீன வசதியோடு அனைவரையும் கிரிவலம் அழைத்துச் செல்லும் அனுபவம் மிக்க நிறுவனம்

# கைலாஷ்-மானஸரோவர்-முக்திநாத்

**மே 10,16 ஜூன் 15, ஜூலை 14, ஆகஸ்ட் 13 , செப்டம்பர் 12, 2010**

புனிதத்துவம் வாய்ந்த கைலாஷ் மற்றும் மானஸரோவரின் எழுச்சி மிக்க சக்தியை நீங்கள் உணரக்கூடிய அரிய வாய்ப்புடன் ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று மானஸரோவரில் புனித நீராடி கிரிவலம் வர உலகத்தரம் வாய்ந்த நேபாளில் உள்ள SHRESTHA HOLIDAYS உடன் இணைந்து ஒவ்வொரு குழுவிலும் சத்சங்கங்கள் மற்றும் பஜன், தியானத்துடன் புறப்படுகிறோம்.

**ரயில் மூலம் 22 நாட்கள், விமானம் மூலம் 15 நாட்கள், ஹெலிகாப்டர் மூலம் 10 நாட்கள்**

காட்மண்டில் இருந்து (சூப்பர் டீலக்ஸ் வசதியுடன்) டயோட்டா கார் (4500 மாடல் புது வண்டி) மூலம் கயிலாயம் சென்று தரிசித்து பின் காட்மண்டு வருவதற்கு 15 நாட்கள் ஆகும். அனைத்து கட்டணம் உட்பட **ரூ.61,900/-** மட்டுமே (வேறு எந்த கட்டணமும் கிடையாது)

சென்னையிலிருந்து இரயில் மூலம் காட்மண்டு சென்று, அங்கிருந்து டயோட்டா கார் (4500 மாடல் புது வண்டி) மூலம் கயிலாயம் சென்று தரிசித்து, பின் இரயில் மூலம் சென்னை வருவதற்கு 22 நாட்கள் ஆகும். இரயில் கட்டணம் உட்பட (சூப்பர் டீலக்ஸ் வசதியுடன்) **ரூ.64,900/-** மட்டுமே (வேறு எந்த கட்டணமும் கிடையாது)

சென்னையில் இருந்து டெல்லி வழியாக விமானத்தில் காட்மண்டு சென்று, அங்கிருந்து டயோட்டா கார் மூலம் கயிலாயம் சென்று தரிசித்து, பின் விமானம் மூலம் சென்னை வருவதற்கு 15 நாட்கள் ஆகும். அனைத்து கட்டணம் உட்பட **ரூ.61,900/-** + விமான கட்டணம்

காட்மாண்டில் இருந்து (சூப்பர் டீலக்ஸ் வசதியுடன்) ஹெலிகாப்டர் மூலம் கயிலாயம் சென்று தரிசித்து பின் காட்மாண்டு வருவதற்கு 10 நாட்கள் ஆகும். அனைத்து கட்டணம் உட்பட **ரூ.1,40,000 /-** மட்டுமே. (வேறு எந்த கட்டணமும் கிடையாது)

கைலாஷ் உள்பரிக்கிரமா (Inner kora - all three), 20 நாட்கள், கட்டணம் **ரூ.90,000/-** புறப்படும் நாள்: ஆகஸ்ட் 18

**காட்மாண்டில் இருந்து மனக்கமனா, போக்ரா, ஜோம்சோம் வழியாக முக்திநாத் சென்று தரிசனம் செய்துவிட்டு மீண்டும் காட்மாண்டு வர 3 நாட்கள் ஆகும். அனைத்து கட்டணம் உட்பட ரூ.12,900/- மட்டுமே.**

சிவாச்சாரியார்கள், திருமுறை ஓதுபவர்கள், டாக்டர்கள் மற்றும் குரூப்பாக வருபவர்களுக்கு கட்டணத்தில் சலுகை. பாஸ்போர்ட் அவசியம். இல்லாதவர்களுக்கு ஏற்பாடு செய்து தரப்படும்.

♦ காட்மாண்டுவில் ஸ்டார் ஹோட்டலில் தங்கும் வசதி ♦ மானஸரோவரிலும் கயிலாயத்திலும் சாஸ்திரிகளைக் கொண்டு அவரவர்களுக்கு சிறப்பு பூஜை செய்யப்படும் ♦ ஒவ்வொரு ஜீப்பிலும் ஆக்சிஜன், மாஸ்க் வசதியுடன் 4 அன்பர்கள் மட்டுமே ♦ கயிலை பயணம் வீடியோ எடுக்கப்படும் ♦ யாத்திரை காலம் முழுவதும் மினரல் குடிநீருடன் ஆசாரமான பிராமணாள் உணவு ♦ மருத்துவ வசதி ♦ குளிருக்கு ஏற்ற பாதுகாப்பான தங்குமிடங்கள் (Mud Houses) ♦ சென்னையிலிருந்து கயிலாயம் சென்று கயிலைநாதனை தரிசித்து ஊர் திரும்பி வரும் வரை நாங்கள் கூடவே இருந்து சிறப்பான சேவை செய்கிறோம்.

**தமிழ்நாட்டிலிருந்து கயிலாய பயணத்திற்கு தேவையான அனைத்து உபகரணங்களுடனும் பாதுகாப்புடனும் தரமான வசதிகளுடனும் சுகாதாரமான தமிழக உணவு வகைகளை 3 வேளையும் வழங்கி ஒவ்வொரு குழுவிலும் டாக்டர் மற்றும் சிவாச்சாரியார் துணையுடன் அழைத்துச் செல்லும் அனுபவம் மிக்க ஒரே நிறுவனம்**



## ஸ்ரீ அன்னபூரணி யாத்ரா சர்வீஸ்

Kailash - Manasarovar & Mukthinath Yatra Entirely Organised by Brahmins

63, நடுத்தெரு, மயிலாப்பூர், சென்னை – 600 004

**Cell : 97911 11979 / 94446 76757** (24 Hrs)



**SPECIAL CARE FOR SENIOR CITIZENS   ENJOY POURNAMI (FULLMOON NIGHT) AT MANASAROVER**




கல்கி

2010 மார்ச் 7
விரோதி மாசி 23
மலர் : 68
இதழ் : 32


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

# ஆன்மாவை அடகு வைக்காதீர்கள்!

குடியரசுத் தலைவர் தமது நாடாளுமன்ற உரையில், விலைவாசிப் பிரச்னையின் அச்சுறுத்தலைப் பகிரங்கமாக ஒப்புக்கொண்டிருக்கிறார்.

பிரச்னை, தற்போதைய விலைவாசி உயர்வு மட்டும் அல்ல; அடுத்து வரவிருக்கும் நிதிநிலை அறிக்கையின் வரலாறு காணாத நிதிப் பற்றாக்குறையும்கூட. அதன் விளைவாக, ஏற்கெனவே உயர்ந்து நிற்கும் விலைவாசி மேலும் மேலும் ஏறி, ஏழை, மத்தியதர வர்க்கத்தைக் கசக்கிப் பிழியும் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை.

"விலைவாசிகளைக் குறைக்க நல்ல ஆலோசனைகளுடன் வாருங்கள்," என எதிர்க்கட்சியினரை அறிவுறுத்தி, நாடாளுமன்றத்தில் விவாதத்துக்கு வழிவகை செய்திருந்தால், சில-பல நல்ல முடிவுகளுக்கு அது வழிவகுத்திருக்கக்கூடும். விலைவாசிகள் உடனே குறையாவிட்டாலும், விவாதங்கள் மக்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்தியிருக்கும். அவற்றின் இறுதியில் வெளிப்பட்டிருக்கக்கூடிய ஆலோசனைகள் அல்லது முடிவுகளின் பயனாக, பொருளாதாரக் கொள்கை, மறுபரிசீலனைக்கும் - மாற்றங்களுக்கும் உட்பட்டிருக்கவும் வாய்ப்பு உண்டு.

இதற்கெல்லாம் இடங்கொடாமல், மத்திய அரசு தனது நாடாளுமன்ற பலத்தைப் பிரயோகித்து, தான் விரும்பும் நிதிநிலை அறிக்கையை நாட்டின் மீது திணிப்பதற்குத் தயாராகியிருக்கிறது. (இவ்விதழ் வெளிவரும் நேரத்தில் பட்ஜெட் வெளியாகியும் இருக்கும்.) அந்த அறிக்கையில் இருக்கக்கூடிய இலவசங்களும் - மானியங்களும் ஏழை மக்களை ஆறுதல்படுத்த உருவாக்கப்பட்டவை.






ஆனால், ஆறுதலே பிரச்னைக்குத் தீர்வாகாது. கடும் உணவுப் பற்றாக்குறை, உணவுப் பொருட்களின் விலைவாசி உயர்வு ஆகிய இரட்டைச் சாட்டையடிக்கு, மானியங்கள் மட்டுமே மருந்தாக முடியாது.

விவசாய உற்பத்தியும் - கிராமப்புற வேலை வாய்ப்புகளும் பெருகுவதற்கு அரசு தகுந்த நடவடிக்கைகளை எடுத்தாக வேண்டும். உணவுப் பாதுகாப்பு, பதனிடுதல், அதையொட்டிய ஆராய்ச்சி போன்றவற்றுக்குத் திட்டமிட வேண்டும்; அவற்றை விரைந்து அமலாக்கவும் வேண்டும். இது அத்தியாவசியம். விவசாயக் கடன்களை ரத்து செய்யவும் கிராமப்புற வேலை வாய்ப்பு உத்தரவாதத் திட்டத்தை அமல்படுத்தவும் இவ்வரசு காட்டிய ஆர்வத்தை, விவசாயத் துறையின் உற்பத்திப் பெருக்கத்துக்கும் மேம்பாட்டுக்கும் காட்டத் தவறிவிட்டது. இன்றைய விலைவாசி உயர்வுக் கொடுமைக்கு இது ஒரு முக்கியக் காரணம்.

அதனினும் வேதனை தரும் விஷயம், அமெரிக்காவுடன் காதும் காதும் வைத்தாற்போல் ஓர் ஒப்பந்தம் கையெழுத்தாக இருக்கிறது. அதன் வாயிலாக, அமெரிக்கத் தனியார் நிறுவனங்கள் இந்திய விவசாயத் துறையில் முதலீடு செய்ய அனுமதிக்கப்படும். விவசாய உற்பத்தி, ஆராய்ச்சி - அபிவிருத்தி, விவசாயம் சார்ந்த தொழில்கள் என அனைத்திலும் அமெரிக்க நிறுவனங்களை நுழைய அனுமதிக்கும் இவ்வொப்பந்தம், அமைச்சரவையின் ஆமோதிப்பையும் பெற்றுவிட்டது! அது அமலுக்கு வந்தால், நம் நாட்டில் விளையும் உணவையே நாம் அமெரிக்க நிறுவனங்களிடமிருந்து காசு கொடுத்து வாங்கும் நிலைக்குத் தள்ளப்படுவோம்! அப்போது விலைவாசி எந்தக் கொம்பில் ஏறும் என்பது கற்பனைக்கும் எட்டாத விஷயம்!

அமெரிக்காவுடனான இந்த ஒப்பந்தத்தைத் தடுக்க, எதிர்க்கட்சிகள் உடனே ஒன்றிணையட்டும். இல்லாவிட்டால் இந்தியாவின் ஆன்மாவுங்கூட அமெரிக்காவிடம் அடகு வைக்கப்பட்டுவிடும்!

O

பெரிய பில்டப், ஹீரோயிச ஃபோகஸ், தெவும் இல்லாம வலுவான கதையின் நாயகனாக உள்ளே வந்து இன்று, தன்னை, தன் வெற்றியை படிப்படியாகச் செதுக்கி முன்னேறியிருக்கிறார் தனுஷ். மற்ற ஹீரோக்களுக்கு இல்லாத ஸ்பெஷாலிட்டியாக, குடிசைப் பகுதி ரசிகர்களிடம் செல்வாக்கு அதிகம் பெற்றவர் தனுஷ்தான். இதுவரை 22 படங்கள் முடிந்து, 16 படங்கள் வெளிவந்து வெற்றி பெற்று, பந்தா இல்லாம முன்னேறும் தனுஷிடம் வெற்றி ரகசியம் கேட்டால்...

"நான் இன்னும் பெரிசா சாதிக்கல. இப்பதான் என் பயணத்தைத் துவங்கியிருக்கேன். என்னைப் போய் கேட்கறீங்களே!" என்கிறார் அடக்கமாக...

அவருடைய வெற்றியின் ரகசியம் புரிந்தது நமக்கு! - சசிகலா



# மேலே மேலே முன்னேறு!





வசீகரன் இசைக்கனவுகள் விஎன் மியூசிக் ட்ரீம்ஸ் நிறுவனம் சார்பில் சமீபத்தில் நார்வே நாட்டுத் தலைநகர் ஆஸ்லோவில் தமிழ் திரைப்பட விழா நடந்தது. சர்வதேச அளவில் முழுக்க முழுக்க தமிழ் சினிமாவுக்கென்றே ஏற்பாடு செய்யப்பட்ட முதல் திரைப்பட விழா இதுவாகும். அதில் தேர்வு செய்யப்பட்ட விருதுகளின் பெயரும் படங்களும் இதோ.

சசிகுமார் இயக்கிய சுப்பிரமணியபுரம் - பிரபல பட விருது.

மிஷ்கின் இயக்கிய நந்தலாலா - **மக்கள் தெரிவு விருது.**

எஸ்.பி.ஜனநாதன் இயக்கிய பேராண்மை - **மேன்மை நிலை விருது.**

சமுத்திரகனி இயக்கிய நடோடிகள் - **மக்கள் இதயம் தொட்ட விருது.**

கனடிய தமிழரான லெனின் எம்.சிவம் இயக்கிய 1999 திரைப்படம் - **நள்ளிரவுச் சூரியன் விருது.**

(அட மசாலா படம் எதுவும் லிஸ்ட்ல இடம் பிடிக்கலையா, சபாஷ்!)

- நந்தினி ப்ரியன்

## ஆஸ்த்துமா, ஈஸ்னோபிலியா, சைனஸ், அலர்ஜி, டான்சில், தும்மல், காச நோய் போன்றவற்றுக்கு தெய்வீக மூலிகை மற்றும் இயற்கை சிகிச்சை முறைகள்

**பத்தியம் கிடையாது. பக்க விளைவு கிடையாது.**

ஆஸ்த்துமா என்றாலே நுரையீரல் பாதிக்கப்பட்டுள்ளது என்பது எல்லோருக்கும் தெரியும். நம் உடலின் மார்பறையில் பக்கத்துக்கு ஒன்றாக இரண்டு நுரையீரல்கள் உள்ளன. நமது மூச்சு மண்டலம் மூக்கு, மூச்சுக்குழல், மூச்சுக்கிளைக்குழல், நுரையீரல், மூச்சு நுண் குழல்கள் மற்றும் காற்று நுண்ணறை போன்ற பகுதிகளைக் கொண்டுள்ளது. இதில் முக்கியமாக பிராங்கஸ் எனப்படும் மூச்சு கிளைக் குழல்கள் பாதிக்கப்படும்போதுதான் ஆஸ்த்துமா ஆரம்பமாகிறது.

ஆஸ்த்துமாவில் மூன்று வகைகள் உள்ளன.

1. மூச்சுக்கிளைக் குழல்கள் (Bronchial Asthma) பாதிக்கப்படும்போது ஏற்படும் ஆஸ்த்துமா
2. இதயம் பாதிக்கப்படும்போது (Cardiac Asthma) ஏற்படும் ஆஸ்த்துமா
3. சிறுநீரகக் கோளாறால் (Renal Asthma) ஏற்படும் ஆஸ்த்துமா



Dr. M.சபாபதி

**மூச்சுக்கிளைக் குழல்கள் பாதிக்கப்படும் போது ஏற்படும் ஆஸ்த்துமா :** நமது மூச்சு மண்டலம் மென்மையான சவ்வுகளால் ஆனவை. காற்றைத் தவிர வேறு எந்த மிக நுண்ணிய பொருள் அந்தப் பாதையைத் தொட்டாலும், மென்மையான சவ்வுகள் சுருங்கிவிடும். மூச்சுக் கிளைக் குழல்கள் சுருங்கும்போது நுரையீரலுக்குச் சென்றுகொண்டு இருக்கும் ஆக்ஸிஜன் அளவு குறைகிறது. இதனால் மூச்சு இரைப்பு ஏற்படுகிறது. இளம் வயதில் ஏற்படும் ஆஸ்த்துமாவை பிரைமரி காம்ப்ளக்ஸ் என்று கூறுவார்கள். நமது உடலில் நோய் எதிர்ப்பு சக்தி குறைந்து, நோய்க்கிருமிகள் அதிகமாகி இரத்தத்தில் ஈஸ்னோபில்ஸ் என்ற அணுக்கள் தன் எண்ணிக்கையில் இருந்து அதிகமாகி விடும்; இதைத்தான் ஈஸ்னோபீலியா என்று கூறுவார்கள். தொற்றுக்கிருமிகள் அதிகமாகும் போது டஸ்ட் அலர்ஜி, சளி, இருமல், தும்மல், மூக்கில் நீர்வடிதல் போன்ற அறிகுறிகள் தோன்றும். இதனைக் கவனிக்காவிட்டால் சைனஸ் ஆக மாறிவிடும். சைனஸ் நமது மூக்குப் பகுதியில் உள்ளன. இது நாம் உள்ளிழுக்கும் காற்றை ஈரப்பதமாக்கி நுரையீரலுக்கு அனுப்பும் வேலையைச் செய்கின்றன. சைனஸ் பகுதி கிருமிகள் மூலம் பாதிக்கப்படும்போது நீர்த் தேக்கம் ஏற்பட்டு தலைவலி, சளி, தலைபாரம், காய்ச்சல் போன்றவை ஏற்படும். இந்த சைனஸ் நோயைக் கவனிக்காவிட்டால் தான் இதன் அடுத்த நிலையான மூச்சுக்கிளைகள் பாதிக்கப்பட்டு ஆஸ்த்துமாவாக மாறிவிடும்.

**இதய நோயால் ஏற்படும் ஆஸ்த்துமா :** இதயம் நோயால் பாதிக்கப்படும்போது ஏற்படும் மூச்சிரைப்பு ஆகும். இதில் மூச்சுத்திணறல், வேகமான, அதிகமான நாடித்துடிப்பு, நெஞ்சுவலி, படபடப்பு போன்றவை ஏற்படும். இவர்களுக்குப் பகலைவிட இரவில்தான் அதிகமான மூச்சுத் திணறல் ஏற்படும்.

**சிறுநீரகக் கோளாறால் ஏற்படும் ஆஸ்த்துமா :** சிறுநீரகங்கள் பாதிக்கப்படும்போது ஏற்படும் மூச்சிரைப்பு ஆகும். சிறுநீரகங்கள் பழுதடையும்போது இரத்தத்தில் உள்ள கழிவுப் பொருட்களும், உற்பத்தி ஆகும் சிறுநீரும் போதுமான அளவு வெளியேற்றப்பட முடியாததால் உடலில் நுரையீரல் முதல் பல உறுப்புகளில் நீர்த் தேக்கம் ஏற்பட்டு மூச்சுத்திணறல் ஏற்படும்.

**ஆஸ்த்துமா நோய்க்கான காரணங்கள் :** புகைத்தல், பொடி போடுதல், மதுவகைகள், நிறம், மணம் போன்றவற்றுக்காகப் போடப்படும் இரசாயனம் கலந்த பொருட்கள், பலவித நோய்களுக்காக எடுக்கும் வீரியமிக்க இரசாயனம் கலந்த மருந்துகள், நீண்ட நாள் மலச்சிக்கல், பால், டீ, காப்பி, இனிப்பு வகைகள், குளிர்ந்த பானங்கள், நோய் எதிர்ப்பு சக்தி குறைவு, டென்ஷன், கவலை, பயம், பனி, குளிர், மழை போன்ற சீதோஷ்ண மாறுபாடுகள், நச்சுக்காற்று, மாசு நிறைந்த புகை போன்றவற்றால் சுவாச உறுப்புகள் பாதிப்படைந்து சுருக்கம் ஏற்பட்டு, ஆக்ஸிஜன் அளவு குறைந்து விடுகிறது. இதனால் மூச்சிரைப்பு தோன்றுகிறது.

**ஆஸ்த்துமா நோய்க்கான அறிகுறிகள் :** சளி, இருமல், தும்மல், மூக்கில் நீர் வடிதல், மூக்கடைப்பு, மூச்சுத் திணறல், மூச்சுவிட முடியாமை, பசியின்மை, மூச்சுவிடும்போது விசில் சத்தம் வருதல், மலச்சிக்கல், கோழை, கபம் போன்றவை இருக்கும்.

**குறிப்பு : மேற்கூறிய நோய்களைப் போக்கும், சித்தர்கள் அருளிய தெய்வீக மூலிகைகள், கலவை பொடியாக அல்லது கேப்ஸூலாக அல்லது கலவை லேகியமாக பக்க விளைவு இல்லாமல் எங்கள் முகவரியில் சிகிச்சை பெறலாம்.**

ஒவ்வொரு மாதமும் 2ம் தேதி [illegible] 4ம் தேதி [illegible]
7, 8ம் தேதி [illegible] 9ம் தேதி [illegible]
12ம் தேதி [illegible] 13ம் தேதி [illegible]
14ம் தேதி [illegible] 15ம் தேதி [illegible]
16ம் தேதி [illegible] 20, 21ம் தேதி [illegible] 26ம் தேதி [illegible]


**Dr. M.குருபரன், Dr. M.சபாபதி,**
**S/o Dr. C.K. மாணிக்கவாசகம்**

**CKM தெய்வீக மூலிகை மையம்**

**தலைமை முகவரி :** P.B.No. 30, 1, திருநாத முதலி நகர் (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் - 635 601
✆ 04179-220469, 222769 **செல் :** 94441 61670, 94444 07638

**சென்னை கிளை :** 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 10
✆ 044-26424285, 26427638 **செல் :** 9444001447


**மேலே உள்ள முகவரிகளில் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 - 1 மணி வரை, மாலை 5 - 7 மணி வரை**

## அஜயன் பாலா

# 21

**உ**லகில் எங்காவது ஒரு நதி நேர்க்கோட்டில் சென்று கடலில் கலக்கிறதா? அப்படி ஒரு நதி இருந்தால் அதை நாம் விரும்புவோமா?! அப்படியே இருந்தாலும் அதில் என்ன சுவாரசியம் இருக்க முடியும்?! அதுபோலத்தான் வாழ்க்கையும். எதிர்பாரா திடீர் திருப்பங்கள்தான் வாழ்க்கையின் சுவாரஸ்யம். அப்படியில்லாத வாழ்க்கை உப்புசப்பற்றது. தேன்மொழியின் வாழ்க்கை ஒரு நதியைப் போன்றது. பல திருப்பங்கள் திடீர் பள்ளத்தாக்குகள், வீழ்ச்சிகள், கொந்தளிப்புகள், சீற்றங்கள்- இவற்றுடன் சிறு சுழிப்புகளுடனும் கூடிய மகிழ்ச்சியான கொலுசு கட்டிய வயசுப்பெண்ணின் நடையைப்போல துள்ளல்களும் நிறைந்தது.

தந்தை அருணாச்சலத்துடன் அவரது கிராமத்துக்குச் சென்றிருந்தவளின் கார் சென்னைக்குத் திரும்பும்போது சொல்லி வைத்தாற்போல் அந்தக் கிராமத்திலா நிற்க வேண்டும்?

அந்தக் கிராமத்தில் கிட்டத்தட்ட ஐம்பதுபேர் அவளுக்கு முன்பே பரிச்சயமானவர்கள் என்று சொன்னால் ஆச்சர்யப்படுவீர்கள். நீங்கள் மட்டுமா? தேன்மொழிக்கும் அது ஆச்சர்யம்தான்!

'ஐ பாடி'ல் அவளுக்கு மிகவும் பிடித்த கிஷோரின் பாடல்கள் ஓடிக்கொண்டிருக்க, காரின் கண்ணாடியைத் திறந்துவைத்துக்கொண்டு வேடிக்கை பார்த்தவளுக்கு, அருகிலிருந்த கொய்யாமரத்தைப் பார்த்ததும் ஆவல் தூண்டப்பட...

அருகிலிருந்த சிறுவனை அழைத்து 50 ரூபாய்த் தாளை நீட்டி கொய்யாப் பழத்தைப் பறித்துத் தரும்படி கேட்டாள்.

பையன் பணத்தை வாங்கும்போது அங்கிருந்த வீட்டிலிருந்து ஒரு பெண்ணின் குரல், ''ரமேசு யாருடா அது?''

பையன் விலக, குடிசை வீட்டின் வாசலில் தெரிந்த அந்த அம்மாவின் முகம் தேன்மொழியை உணர்ச்சிவசப்பட வைத்தது... உற்சாகத்தில், ''டாடி. எனக்கு எனக்கு இவங்களைத் தெரியும் டாடி.'' அருணாச்சலம் இப்போது திரும்பிப் பார்த்தார் .

தேன்மொழிக்கு மிகவும் பரிச்சயமான அந்த முகத்தை எங்கே பார்த்தோம் என்று மட்டும் நினைவில் இல்லை. சட்டென தேன்மொழி காரின் கதவைத் திறந்துகொண்டு இறங்கினாள். அருணாச்சலமும் இறங்கினார்.

இப்போது அந்த அம்மாள் வாயில் புடைவையைப் பொத்திக்கொண்டு ஆச்சர்யத்துடன் சிரிக்கத் தொடங்கினாள். தேன்மொழிக்கு ஞாபகம் வரவில்லை.

''என்னம்மா அதுக்குள்ள என்னை மறந்துட்டியா ?''



தேன்மொழியின் வைசாக் ரயில் பயணத்தின்போது ரயில் பாதியில் நிற்க ஒரு பஜனை கோஷ்டிக்கு முன் அவள் பாட்டுப் பாடினாள் அல்லவா..? அச்சமயம் சூர்யா பாடும்போது ஒரு பெண் மணியின் மடியில் தலைவைத்துப் படுத்துக்கொண்டாள் அல்லவா? அதே பெண்மணிதான்!

தேன்மொழிக்கு அந்த அம்மாவின் முகம் முழுவதுமாய் நினைவுக்கு வந்தபோது உடல் சிலிர்த்தது.

''டாடி நான் சொன்னேன்ல. வைசாக் போகும் போது ட்ரெய்ன் நின்னு அங்க நாங்க கும்பலா வட்டமா உக்காந்து பாட்டெல்லாம் பாடினோம்னு. இவங்க ... இவங்கதான் அது.''

''இவங்களுக்கும் என் பேர்தாம்பா... தேன்மொழி ஆம் ஐ ரைட்'' கண்களை விரித்து அந்த அம்மாவிடம் அவள் தன் ஞாபகத் திறனைக் காண்பிக்க...

''பரவாயில்லப்பா அவ்வளவு கரெக்குட்டா ஞாபகம் வச்சிக்கினு இருக்கியே...'' தேன்மொழி



# பகல் மீன்கள்

யின் அப்பாவைப் பார்த்தும் இடுப்பில் சொருகியிருந்த புடைவையை இழுத்துவிட்டாள். தலைமுடியைப் பின்பக்கமாகக் கோதி திரும்பவும் ஒரு கோடாலிக்கொண்டையை இறுக்கமாகப் போட்டுக்கொண்டாள். முகத்தில் புன்னகை மட்டும் மாறவில்லை.

''வாம்மா... ஐயா வாங்க உக்காருங்க ... டேய் ரமேசு போய் மணி வூட்ல பெஞ்சு தூக்கினுவாடா.''

பையன் துள்ளிக் குதித்துக் கொண்டு பின்பக்கமாகப் பாய்ந்தான்

இரண்டுபேர் தலையில் ஒரு நீள பெஞ்சைத் தூக்கிகொண்டுவர, அவ




ளுக்குப் பின்னால் இரண்டொரு பெண்மணிகள் சிரித்த முகத்துடன்...

அடுத்த சில நிமிடங்களில், அன்று அவள் பார்த்த, அவள் குரலில் தங்கள் மனத்தைக் கரையக்கொடுத்த பஜனைக் கோஷ்டியில் பாதிப்பேர் அவளைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டனர். ஒவ்வொருவரும் தேன்மொழி அங்கு வந்திருப்பதைப் பார்த்து ஆச்சர்யத்துடன் கேட்டார்கள். அவளது சொந்த கிராமும் அருகில் இருப்பதை அறிந்து வியந்தார்கள்.

அருணாச்சலத்துக்கு மகளின் குரலுக்கு இத்தனை ரசிகர்கள் இருப்பது ஆச்சர்யத்தைத் தந்தது. கடைசியில் பேச்சு அங்கு இங்கு சுற்றி அவளது தொலைந்த மணிபர்ஸுக்குத் திரும்பியது.

பர்ஸ் அன்று காணாமல் போனதையும், அதனால் தான் ரயில்நிலையத்தில் டிக்கட் இல்லாமல் பட்ட கஷ்டத்தையும் தேன்மொழி விவரிக்க, அப்போதுதான் ஒரு பெண்மணி, ''அப்ப அந்தத் தம்பி உங்ககிட்ட பர்சைத் திருப்பித் தரலையா?''

தேன்மொழிக்கு அவள் என்ன சொல்கிறாள் என முதலில் புரியவில்லை.

''எந்தத் தம்பி..?''

''அட அன்னைக்கு நம்மகூட ஒண்ணா உக்காந்து பாட்டெல்லாம் பாடுச்சே... நீங்களும் அந்தத் தம்பியும் கூட ஒண்ணாசேந்து பாட்டெல்லாம் பாடுனீங்களேம்மா?''

தேன்மொழியின் அறிவுக்கு இப்போதுதான் எட்டியது. அவள் சொல்வது சூர்யா வைத்தான் என்பது.

உடன் அந்தப் பெண்மணி சடசட வெனக் கொட்டத் துவங்கினாள் .

''அன்னிக்கு ரயிலைப் புடிக்க ஓடியாரும்போது எங்க ஊட்டுக்காரர்தான் அதைப் பாத்து எங்க ஆளுங்கள்ள யாரோடதாவாது இருக்கும்னு கையில எடுத்துக்கினு வந்தாரு.. அப்புறம் ட்ரெயின்ல எங்க ஆளுங்ககிட்ட கேட்டப்ப, யாரும் அவுங்களது இல்லைன்னு சொல்லவே நானும் அப்படியே வெச்சிகினு இருந்தேன். ரூபாகூடா நெறைய்ய இருந்தது.''

''அப்புறம் ...'' தேன்மொழி புருவத்தை நெரித்தாள் .

''அப்புறம் அதான் விசாகப்பட்டினம் வந்துச்சல்ல... அப்பதான் அந்தத் தம்பி எங்க பொட்டிக்குள்ள வந்து கேட்டுச்சு, உம் பர்சை

யாராவது பாத்தாங்களான்னு...''

''ம்ம்ம்...''

தேன்மொழிக்குள் பதட்டத்தின் முன் பைத்தியம் பிடித்தாற்போல் தடுமாறத் தொடங்கியது.

''அப்பதான் என் வூட்டுக்காரர் எடுத்துக் கொடுத்தாரு...''

''யார்கிட்ட...''

''அதான்ம்மா நான்தான் சொன்னேன்ல அந்தத் தம்பிகிட்ட ...''

''யாரு சூர்யாகிட்டவா?''

''அவரு பேரு என்னன்னு தெரியாதும்மா, அன்னிக்கு நம்மகூட உக்காந்து பாட்டெல்லாம் பாடுச்சில்ல. அந்தத் தம்பி''

தேன்மொழியின் இதயம் மிக மெதுவாக நொறுங்கத் துவங்கியது. கண்ணில் நீர் ஒதுங்கியது... அடக்க முயற்சித்தாள். கடவுளைப் பிரார்த்தித்தாள்; 'இவள் சொல்வதெல்லாம் பொய்யாக இருக்கக்கூடாதா? அல்லது இது ஒரு கனவாக இருக்கக் கூடாதா?' என்று ஏங்கினாள். அமைதியாக இருந்தாள்.

இதயத்தின் வலி அதிகமாக இருந்தது. இப்படி ஒரு வலியை அவள் தன் வாழ்நாளில் எதிர்கொண்டதில்லை.

திரும்பிப் பார்த்தாள். நல்லவேளை அப்பா கேட்கவில்லை. யாருடனோ தொலைபேசியில் பேசிக்கொண்டிருந்தார்.

''என்னமா யோசிக்கக்கினு இருக்கே... அந்த தம்பி அன்னைக்கு உங்கிட்ட பர்ஸைத் திருப்பித் தரலையா...?''

''ஆள் பாத்தா அன்னிக்கு அவ்ளோ டீசன்டா இருந்தான். சரியான மொள்ளை மாரி போலிருக்கு.''

சட்டென தேன்மொழி சுதாரித்தாள். கண்ணீரை அடக்கிகொண்டு, ''இல்லை... இல்லைம்மா... அன்னைக்கே எங்கிட்ட கொடுத்துட்டார்... தேங்க்ஸ் ''

சமாளித்தாள்.



**ஆள் பாத்தா அன்னிக்கு அவ்ளோ டீசன்டா இருந்தான். சரியான மொள்ளைமாரி போலிருக்கு**

அதற்குள் காரும் தயாராகிவிட, தேன்மொழி எழுந்துகொண்டாள். பின் அருகிலிருந்த தேன்மொழி அக்காவிடம் அவள் காதில் ஏதோ சொல்ல, உடனே ''நீ வாம்மா'' என அழைத்துக்கொண்டு பின் பக்கமாகச் சென்றாள்

அந்த அம்மாள் காட்டிய பாத்ரூமில் ஒரு துணி துவைக்கும் கல் இருந்தது. கதவை சாத்தி கொக்கிபோட்ட தேன்மொழி நிமிர்ந்து வானத்தைப் பார்த்தாள்.

தன்னை மீறிப் பொங்கி உடைந்த அழுகையை அவளால் கட்டுப்படுத்தமுடியவில்லை. அப்படியே கல்லில் அமர்ந்து அழத் துவங்கினாள்.

எதற்கு..? எதற்கு அவன் இப்படித் தன்னிடம் நடக்க வேண்டும்? எதற்காக அப்படிப் பொய் சொல்ல வேண்டும்? அந்த நாளை திரும்பவும் ஞாபகப்படுத்தினாள். அப்புறம் எதற்கு அவன் தனக்காக ஃபைன் கட்டவேண்டும்? இத்தனை நாடகம் ஏன்..?

''என்னம்மா... ஏம்மா அழுவுற ?''

வெளியே அந்த அம்மாளின் குரல்தான் அவளை சுயநினைவுக்குக் கொண்டுவந்தது. முகத்தில் தண்ணீரை ஊற்றிக் கழுவினாள்.

***(மீன்கள் துள்ளும்...)***

# அ. இராஜிவ்காந்தி கவிதைகள்

காற்றின் தாலாட்டில்
தலைசாயும் புற்கள்,
பூச்சிகளின் சினேகம்,
மரத்தை விட்டுப்பிரிந்து
சங்கடப்படும் சருகுகள்,
சிதறிக்கிடக்கும்
இனிப்புத் துகள்களைச்
சேகரிக்கும் எறும்புகளென
இன்னும் கொஞ்சம்
ரசித்துக் கொள்கிறேன்.
அவசரம் வேண்டாம்.
தாமதமாகவே வா..!

மறக்க முடியவில்லை
இன்னும்...
'ரெண்டு ரூபாய்க்கு பூண்டு,
ஒரு ரூபாய்க்கு கடுகு...
ரெண்டு ரூபாய்க்கு பூண்டு,
ஒரு ரூபாய்க்கு கடுகு...' என
மளிகைக் கடை வரை
முணுமுணுத்துச்சென்று
யானை ரொட்டியையும்
ஆரஞ்சு மிட்டாயையும்
பார்த்தபடி
சொல்லியனுப்பாத
பருப்பை
வாங்கிக்கொண்டு
வந்தபோது சினந்த
அம்மாவின் முகம்.



சோ எழுதிய

# ஹிந்து மஹா சமுத்திரம்



வேதங்கள் தொடங்கி, உபநிஷத்துக்கள் வழியே வேதாந்த சிகரத்தில் ஏறி; சாத்திரம் கண்டு; புராணங்கள் வழங்கி, ஆலயங்கள் எழுப்பி; பக்தி வளர்த்து; சரித்திரம் எழுதி; நீதி பல வகுத்து; சட்டம் இயற்றி; சமூக சிந்தனையில் ஆழ்ந்து; விஞ்ஞானம்; கணிதம்; இலக்கியம்; வான சாத்திரத்தை அதன் கரையோரத்தில் நின்று பார்த்தவருக்கு ஏற்பட்ட பிரமிப்பை, மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்கிறார்.

**முதல் பாகம்** — ரூ.200.00

யுகங்களின் காலக்கணக்கு, பெயர்க்காரணம், யாகங்கள், தெய்வங்கள், உருவங்கள், வாஹனங்கள், வேதங்கள், உபநிஷத்துக்கள், தத்துவங்கள், எமதர்மன் உபதேசங்கள், மரணத்திற்குப் பின், வருணனின் உபதேசம், நாரதர் பெற்ற உபதேசங்கள், ப்ரம்ம ஸூத்ரம் - போன்ற பல தகவல்கள்.

**இரண்டாம் பாகம்** — ரூ.250.00

ஷடங்கங்கள், ஸ்ம்ருதிகள், தர்மம், சட்ட தத்துவங்கள், அர்த்தசாஸ்திரத்தில் கூறப்படும் அரசு நிர்வாகம், பிரம்ம புராணம், பத்ம புராணம், விஷ்ணு புராணம், சிவ புராணம், நாரத புராணம், மார்க்கண்டேய புராணம், அக்னி புராணம், பவிஷ்ய புராணம், பிரும்ம வைவர்த்த புராணம், லிங்க புராணம், வராஹ புராணம், ஸ்கந்த புராணம், மத்ஸ்ய புராணம், கருட புராணம், ப்ரும்மாண்ட வாயு புராணங்கள், ஸ்ரீமத் பாகவதம் - போன்றவை அடங்கியது.

**மூன்றாம் பாகம்** — ரூ.200.00

ராமாயணம், மஹாபாரதம், ஸ்ரீமத் பகவத் கீதை, யோக வாஸிஷ்டம். போன்றவை அடங்கியது.

**நான்காம் பாகம்** — ரூ.150.00

மூன்று ஆச்சார்யர்கள் (ஆதி சங்கரர், ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீ மத்வாச்சாரியர்) வித்யாரண்யர், ஸ்ரீ வல்லபாச்சார்யர், ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் – ஆகியவர்களைப் பற்றியும் தெரிவிக்கிறது

**ஐந்தாம் பாகம்** — ரூ. 250.00

அறுபத்து மூன்று நாயன்மார்கள், பன்னிரு ஆழ்வார்களைப் பற்றியது.

(அழகிய படங்களுடன், சிறந்த தாளில், நேர்த்தியான பைண்டிங் கொண்டது)

அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
(ப.எண்) 244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மைலாப்பூர், சென்னை-4
தொலைபேசி: 24641314 www.alliancebook.com
email: srinivasan@alliancebook.com

''அவனிடம் அன்பாகப் பேசாதே. அவனை அவமானப்படுத்து. அவன் முகத்தில் காறித் துப்பு. அவனுடைய தன் மானத்தை எட்டி உதை'' என்றார் என் ஆத்ம நண்பர். அவர் சொன்ன அவன், ஒரு வருடம் முன்பு, என்னைச் சந்தித்த மாற்றுத் திறனுடைய சகோதரன்தான்! இள வயதிலேயே போலியோ அட்டாக். தனக்கு ஏதேனும் வேலை வாங்கித் தரும்படி கேட்டான்.

நான் பணிபுரியும் மதுரா ட்ராவல்ஸ் அதிபர் வி. கே. டி. பாலனிடம் அவனை அனுப்பி வைத்தேன். சந்தித்துவிட்டு ஏதேதோ சாக்கு போக்கு சொல்லி, தன்னால் அவர் கொடுத்த வேலையைச் செய்ய முடியா தென்று போய்விட்டான்.

வேலை என்கிற அந்தஸ்தோடு, சம்பளம் வேண்டும். ஆனால் அதற்குரிய விலையான, உழைப்பைத் தர அவன் தயாராய் இல்லை எனப் புரிந்து கொண்டேன்.

இது பற்றி என் ஆத்ம நண்பரிடம் பேசிக்கொண்டிருந்த போது அவர் சொன்ன அட்வைஸ்தான் முதலில் படித்த வரிகள். அவரே தொடர்ந்து சொன்னார்: ''அவமானங்கள் அவனுக்குள் ஒரு நெருப்பை உருவாக்கும். அந்த நெருப்பு அவனை உழைக்கத் தூண்டும். முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்லும்.''

அவரது வார்த்தைகள் எத்தனை தீர்க்கமானவை?

உங்கள் வாழ்வில் ஏதேனும் இழப்பையோ, அவமானத்தையோ சந்தித்திருந்தால்... இறைவனுக்கு நன்றி சொல்லுங்கள். உங்களை வெற்றியாளராக, வாழ்வின் உயர் நிலைக்கு அழைத்துச் செல்லும், அதியற்புத சக்தி அதுதான்!



# காயங்களுக்கு நன்றி!

அந்த இழப்பினால், இழிவினால், உருவான நெருப்பு இதயத்தில் எப்போதும் எரிந்துகொண்டிருக்க வேண்டும்.

என் நண்பர்களிடம் அடிக்கடி சொல்வேன்: ''என்னைப் பாராட்டித் தட்டிக் கொடுக்கிறவர் கள், எனக்கு நூறு மடங்கு நன்மை செய்கிறார்கள். என் மனதைக் காயப்படுத்தி, அவமானப் படுத்துகிறவர்களோ, ஆயிரம் மடங்கு நன்மை செய்கிறார்கள்.''



பார்வை இழந்த, காது கேளாத, வாய்பேச முடியாத ஹெலன் கெல்லர் சரித்திரத்தில் இடம்பெற்றார். அண்ணல் அம்பேத்கரிலிருந்து வி.கே.டி. பாலன் வரை உதாரணங்களை அடுக்கிக் கொண்டே போகலாம். வாழ்வில் உயர்ந்தவர்கள் அனைவருமே, தங்கள் வாழ்வில் ஏதேனும் ஒரு கட்டத்தில், அவமானங்களையும் இழப்புகளையும் சந்தித்திருப்பார்கள்.

இழப்புகளும் அவமானங்களும் சுரணை கெட்ட அழும்பாக மாறும் அபாயத்தை அனுமதிக்காதீர்கள். அவை உங்கள் வெற்றிக்கான வீரிய விதைகள்.

ஒருவேளை, 'உங்கள் துக்கங்களையும், இழப்புகளையும், இழிவுகளையும், பெற்றுக்கொண்டு, அதற்கு நூறு மடங்காக, வெற்றிகளையும், சந்தோஷங்களையும், தருகிறேன்' என்று கடவுள் அறிவிப்பு வெளியிட்டால், மற்றவர்கள் கைப்பையிலும், சாக்கு மூட்டையிலும், அட்டைப்பெட்டிகளிலும், கொண்டு போகட்டும்.

நீங்கள் கையை வீசிக் கொண்டு, நடந்து போங்கள். கடவுள் ''என்ன? உன்னிடம் எதுவுமில்லையா?'' என்று கேட்பார்.

நீங்கள் தன்னம்பிக்கையோடு, புன்முறுவலுடன் பதில் சொல்லுங்கள்.

''அதெப்படி! என் சரக்கு பின்னால லாரியில வருதுல்ல!''

---

**இ**வ்வளவு விஷயத்தைச் சொல்லும் அந்தோணி முத்து, சமீபமாக வலையுலகில் பாசிட்டிவ் அந்தோணி என மாறியிருக்கிறார்.

'நேர்மறைச் சிந்தனைகளின் கிரியா ஊக்கி' எனும் தலைப்பில் தன்னம்பிக்கை எழுத்துக்களை வலைபதிந்து வருகிறார்.

இலக்கியத்தில் மிகுந்த ஈடுபாடு. இருபத்தைந்து வருடம் முன்னால் பதினொரு வயதில் ஏற்பட்ட விபத்தில், இவருக்கு மிச்சமிருக்கும் வரங்கள், இரு கைகளும், எப்போதும் சிந்திக்கும் மூளையைக் கொண்ட தலையும். (மார்புக்குக் கீழ் உணர்வற்று செயலிழந்து போனது.)

இசையும், ரேடியோ டி.வி மெக்கானிஸமும், கம்ப்யூட்டரும், வலைவடிவமைப்பு (Web designing) அறிவும், சுயமாகக் கற்றதில், 'கடைசி இரண்டும் சோறு போடுகின்றன' என்கிறார்.

இலக்குகள் பற்றிக் கேட்டால்,

''தன்னம்பிக்கை, சுயமுன்னேற்றம் இவற்றின் அடிப்படையிலான துறையில் சுயபரிசோதனைகளை, சக மானுடத்துடன் பகிர வேண்டும். கேட்பவர்களுக்கெல்லாம் இல்லை என்று சொல்லாது கொடுக்கும் நிலைக்கு உயரவேண்டும்'' என்கிறார்.

தொகுப்பு: **கார்த்திகா ரஞ்சன்**

ஜாம்பவான்கள் வாழும் டெஸ்ட் கிரிக்கெட்டில் இந்திய அணியின் கொடி உயரப் பறந்துகொண்டிருக்கிறது. இந்திய கிரிக்கெட் அணி, டெஸ்ட் கிரிக்கெட் தரவரிசைப் பட்டியலில் தொடர்ந்து முதல் இடத்தில் இருக்கிறது. ஷேவாக்குக்கு சிறந்த டெஸ்ட் பேட்ஸ்மேன்கள் வரிசையில் முதலிடம். நீண்டநாளாக அந்தப் பதவியை அனுபவித்தவர் கௌதம் கம்பீர். டெஸ்ட் கிரிக்கெட் சிம்மாசனத்தில் இந்திய அணி இவ்வளவு அதிகாரமாக வீற்றிருப்பது இதுவே முதல்முறை.

எந்த ஒரு விஷயம் சமகால இந்திய அணியையும் முன்பு இருந்த அணியையும் வேறுபடுத்திக் காட்டுகிறது? இரண்டு விஷயங்கள். கம்பீர் வருகிறவரை, இந்திய அணிக்கு நல்ல தொடக்க ஆட்டக்காரர் இல்லாத குறை ஒன்று நீடித்து வந்தது. ரமேஷ், தாஸ், சோப்ரா, தினேஷ் கார்த்திக், ஜாபர் என்று ஒவ்வொருவராக உள்ளே நுழைந்து அதே வேகத்தில் வெளியேறினார்கள். ஷேவாக் மட்டும் தனி ஆளாக நின்றுகொண்டிருந்தார், நல்ல இணை கிடைக்காமல். உள்ளே நுழைந்தார் கம்பீர். இந்திய டெஸ்ட் கிரிக்கெட்டின் முகமே மாறிவிட்டது. சென்ற வருடம் சிறந்த டெஸ்ட் வீரராக விருது வாங்கினார் கம்பீர். அடுத்த முக்கியப் புள்ளி, தோனி. லேட் மிடில் ஆர்டரில் எப்போதும் சுமாராக ஆடும் விக்கெட் கீப்பர்கள்தான் இடம் பிடிப்பார்கள். ஆனால் தோனி வந்தபிறகு சூழல் மாறத்தொடங்கியது. வலுவான 7 பேட்ஸ்மேன்கள் உள்ள அணி என்கிற பெயர் இந்திய அணிக்குக் கிடைத்தது.

வேகப்பந்து வீச்சில் ஜாகீர் கான் மட்டுமே உலகத்தரம். கடந்த சில வருடங்களாக ஹர்பஜன் சிங் சோடை போனாலும் ஜாகீர் தொடர்ந்து பொறுப்புடன் பந்துவீசி, வேண்டிய திருப்பங்களை ஏற்படுத்தித் தந்தார். இஷாந்த், ஸ்ரீசாந்த் போன்ற நல்ல பந்துவீச்சாளர்களும் இந்திய அணியின் வேகப்பந்து வீச்சில் மாற்றம் கொண்டு வந்தார்கள். கும்ப்ளே கிளம்பிச் சென்றாலும் ஓஜா, மிஸ்ரா போன்ற நல்ல இளம் ஸ்பின்னர்கள் உள்ளே நுழைந்ததும் அணியின் ஸ்திரத்தன்மை பாதிக்காதவாறு அமைந்தது.

# நான்கு





ச.ந.கண்ணன்

அணியின் தலைவர் தோனியிடம் பல தவறுகள் தென்பட்டாலும், முழுமையாக அணுகும்போது அவர் ஒரு பாதுகாப்பான கேப்டனாகவே இருந்திருக்கிறார். பந்து வீச்சாளர்களின் விருப்பத்துக்கேற்ப ஃபீல்ட் செட்டிங் செய்கிறார். ஜாகீர் கானின் ஆலோசனைகளைத் தவறாமல் கேட்கிறார். முக்கியமாக உணர்ச்சிவசப்படுவதில்லை. வார்த்தைகளைக் கொட்டுவதில்லை. அவருடைய இந்த அணுகுமுறைகள் உடனடிப் பலன்களைத் தந்துவிடுகின்றன.

தவிர, எப்போதும் அணிக்குப் பெரிய பலமாக இருக்கக்கூடிய தெண்டுல்கர், திராவிட், ஷேவாக், லக்ஷ்மண். உலகில் ஆஸ்திரேலியா உள்பட வேறு எந்த அணியிலும் இவ்வளவு பலமான பேட்டிங் கிடையாது. வருடம்தவறாமல் அமைதியாக உழைத்துக்கொண்டிருக்கும் இந்த நான்கு பேர்தான், நெ.1 தரவரிசையை எட்ட தூண்களாக இருந்திருக்கிறார்கள். ஆனாலும் இந்திய அணியின் முதல் இடத்தின் மேலே கத்தி தொங்குகிறது. பலவீனமான ஃபீல்டிங், ஸ்டீயின் போன்ற அதிவேகப் பந்து வீச்சாளர் இல்லாத குறை, இப்படி இந்திய அணி தன்னை மேம்படுத்திக் கொள்ளத் தேவையான காரணங்கள் நிறைய இருக்கின்றன. ○

# தூண்கள்!







# நாங்க முன்னேற நன்கொடை எதுக்கு?

''**ந**ன்கொடைகள் பணமாகவோ, பொருளாகவோ தேவையில்லை எங் களுக்கு...'' என்கிறார் ராமகிருஷ்ண குடி லின் நிர்வாகப் பொறுப்பில் இருக்கும் பிரம்மசாரி துரை.

''பெற்றோரை இழந்து, எங்களிடம் அழைத்து வரப்படும் குழந்தைகள் தங்கள் சொந்தக் காலில் நிற்கவும், எதிர்காலத்தைத் துணிவுடன் சந்திக்கவும் அவர்களைத் தயார் செய்வதே எங்கள் குடிலின் பணி. நான் கூட 1954ல் அப்படி இங்கு வந்த சிறுவன் தான்'' என்கிறார்.

**கா**விரியின் தென்கரையில் பசுமைச் சூழலில் முக்கொம்புக்கு அருகே திருப்பராய்த்துறையில் எழுபது ஏக்கர் பரப்பில் அமைந்துள்ளது இக்குடில். 1949-ல் ஸ்ரீமத் பிரம்மசாரி ராமசுவாமி இதனை நிறுவி ஐந்து ஆண்டுகள் தவ வாழ்வை மேற்கொண்டார். பின்னர் உயரிய நோக்கத் துக்காக 1954-ல் ஆதரவற்ற சிறுவர்கள் ஐவ ருடன் இயங்கத் தொடங்கியது இக்குடில். இன்று இக்குடிலின் நிழலில் சுமார் முந் நூற்று இருபது சிறுவர்கள். கல்வி, சுய தொழில்... போதிக்கப்படுகின்றன; குடி லின் சொந்தச் செலவில்.

''**ஆ**று முதல் பதின்மூன்று வயதுக் குட்பட்ட சிறுவர்களை இக்குடிலில் சேர்த் துக்குவாங்க. தாசில்தாரிடமிருந்து தரப்

படும் ஆதரவற்ற சிறுவர் என்கிற சான்றிதழ் கட்டாயம் தேவை.

குடில்சார்ந்து உயர்நிலைப் பள்ளி ஒண்ணு இயங்குது. எட்டாம் வகுப்புக்கு மேல், கல்வியில் ஆர்வம் இல்லைன்னா தொழிற்கல்வி பயிற்சிக்கு அனுப்புறாங்க. இங்கே வளர்ந்தவங்க சுமார் மூவாயிரம் பேர் பல இடங்கள்ல தன்னிறைவோடு வாழறாங்க'' - மனநிறைவோடு குறிப்பிடு கிறார் குடிலின் அன்பர் ஒருவர்.

**எ**ல்லாம் சரிதான்... நன்கொடையே வேண்டாம் என்கிறார்களே... அது எப்படி? மனசுக்குள் இடறிக்கொண்டேயிருந்த கேள்வியைக் கேட்டேவிட்டோம் பிரம்ம சாரி துரையிடம்.

''எங்கள் குடிலுக்கென ஐந்தாயிரம் தென்னை மரங்கள், இரண்டாயிரத்து ஐந் நூறு பாக்கு மரங்கள், மூந் நூறு பலா மரங்கள், வாழை மற்றும் தேவைக்கேற்ப நெல் வயல்... இவையெல்லாவற் றையும் விட மேலான செல்வ மான எங்கள் குடிலின் சிறுவர் களின் தேவைக்கு அவற்றி லிருந்து வரும் வருமானம் போதுமானதாக இருக்கிறது. இங்கு வந்து சேரும் சிறார் ஒவ்வொருவருக்கும் ஆயிரம் ரூபாய் டெபாசிட் செய்து விடுகிறோம். உரிய காலத்தில் அத்தொகை வட்டியோடு அவங் களுக்கு அளிக்கப்படும். அவர்கள் படித்து முடித்து வெளியுலகைச் சந்திக்கச் செல்லும் போது, தன்னம்பிக்கையோடு பொருளா தாரக் கையிருப்பையும் ஆதாரமாகக் கொண்டு செல்வர். இவ்வளவு திட்டமிட லுடன் இயங்குவதால்தான் சொல்கிறோம்; எங்களுக்கு நன்கொடை எதுவும் வேண் டாம்'' என்கிறார்.

வெளியே வருகையில் பார்த்தோம். ''பகவான் பரமஹம்சர் பேரருளால் குடில் நிர்வாகம், பொருளாதாரத்தில் தன்னிறைவு பெற்று வளமாயிருந்து வருவதால், யாரிட மிருந்தும் தாமாக வரும் நன்கொடைகளை யும் (பணமாகவோ, பொருளாகவோ, பூமி யாகவோ) எதையும் ஏற்க வேண்டிய அவசியமில்லாது போயிற்று என்பதை பகவத் கிருபையை முன்னிட்டு அன்புடன் அறிவித்துக் கொள்கிறோம்! - குடில் நிர்வா கம்'' என்று அறிவிப்பே செய்திருக்கிறார் கள் முகப்புப் பலகையில்.

## "இங்கே வளர்ந்த மூவாயிரம் பேர் வெளியே ஓஹோன்னு வாழறாங்க!"



'அன்னையாய் - தந்தையாய் அர வணைத்துக் காக்கும் இவை போன்ற 'அன்பாலயங்கள்' பெருகினால் அனாதைச் சிறார் தம் வாழ்வில் ஆனந்தம் பெருகும்!' என்று தோன்றியது நமக்கு!

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# வொண்டர் கேக்கின் சக்ஸஸ் ஃபார்முலா!

**மில்க்கா வொண்டர் கேக். சிறுவர்கள் முதல் பெரியவர்கள்வரை அன்றாடம் கேட்டு, விரும்பிச் சாப்பிடும் கேக். மக்கள் மத்தியில் இந்த கேக் சாம்ராஜ்யத்தை உருவாக்கி வெற்றி கண்டது எப்படி என அதன் நிறுவனர் ராஜா அவர்களிடம் கேட்ட போது...**

''பெரும்பாலான மக்கள் விரும்பிச் சுவைக்கும் பொருள் என்பதாலேயே இந்த கேக் தயாரிப்பில் என்னை ஈடுபடுத்திக்கொண்டேன். என்றுமே, எதிலுமே, உண்மையான உழைப்புக்கு நல்ல பலன் நிச்சயம் கிடைத்தே தீரும். நாம் தேர்ந்தெடுக்கும் பொருள் கலப்படம் எதுவும் இல்லாத, சுத்தமான, சுகாதாரமான பொருளாக இருக்க வேண்டும் என்பதில் நாங்கள் அதிக அளவு அக்கறை காட்டி வருகிறோம். கேக் தயாரிப்புக்குத் தேர்ந்தெடுக்கும் கோதுமையின் தன்மையில் அதிகம் கவனம் செலுத்துவோம்.



● ராஜா



**ஆரம்ப கட்டத்தில், மில்க்கா வொண்டர் கேக்குக்கான ஆதரவு எப்படி இருந்தது?'**

''பொது மக்களின் சுவை அறிந்து, அதற்கேற்றவாறு கேக்குகள் தயார் செய்வது சவாலான விஷயமாகத்தான் இருந்தது. வாழ்க்கையில் வெற்றி இலக்கை அடைய வேண்டுமென்றால், நிச்சயம் பலவித சவால்களைச் சலிக்காமல் சமாளிக்கும் மனோ தைரியத்தை நாம் உருவாக்கிக் கொள்ள வேண்டும். மக்களின் தேவைக்கேற்ப, சுவைக்கேற்ப கேக்குகள் தயாரித்தே தீர வேண்டும் என்ற ஒரு அடிப்படைக் கோட்பாட்டோடுதான் நல்ல தரமான பொருட்களைக் கொண்டு, சுவை சிறிதும் குன்றாத வகையில், புதுப் புதுச் சுவைகளைப் புகுத்தி கேக்குகள் தயாரித்து வருகிறோம்.''

**சுய தொழிலில் ஈடுபட விரும்பும் இளைஞர்களுக்கு நீங்கள் சொல்லக் கூடிய வெற்றி**

**ஃபார்முலா என்ன?**

''கடின உழைப்புக்கு ஈடு இணை எதுவுமே கிடையாது. உழைப்பு, உழைப்பு, உழைப்பு! அப்படி மனச் சலிப்பே இல்லா







## அடுத்தடுத்த இம்ப்ரூவ்மென்ட்: அணிவகுக்கும் வெற்றிகள்!

மல், தான் தேர்ந்தெடுக்கும் துறையில், தொழிலில் வெற்றி பெற்றே தீர வேண்டும் என ஒரு வெற்றி தாகத்துடன் உழைக்க வேண்டும். நாம் தயாரிக்கும் பொருள் சுத்தமானதாகவும், தர மானதாகவும் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் பொதுமக்களின் மனத்தில், இல்லத்தில் நாம் என்றுமே நிலையாக நிற்போம் என்பதை மறந்து விடக் கூடாது. நம் பொருளின் தரத்தை மதித்து, மக்கள் அதனைத் தேடிப் போய் வாங்கச் செய்வதே ஒரு மாபெரும் வெற்றிதானே.

புதியன புகுத்துதல் என்பதும் ஒரு சக்ஸஸ் ஃபார்முலாதான். 'அடுத்து என்ன செய்யலாம்? எப்படி இன்னும் மேம்படுத்தலாம்? என்னென்ன புதுமைகள் கொண்டு வரலாம்?' என நினைத்து, புதுமைகள் பல புரிந்து செயலாற்றி வந்தால், வெற்றி மாலை நிச்சயம் நம் தோள்களைத் தேடி வரும்'' என்கிறார் ராஜா.

**- நளினி சம்பத்குமார்**

# விலகுகிறாரா ஜெ?

### திகைப்பு-1

**பெ**ன்னாகரம் தொகுதியை ஒரு கௌரவப் பிரச்னையாக எடுத்துக் கொண்டு களத்தில் இருக்கும் பா.ம.க. வினருக்கு ஒரு கலக்கம் இருக்கத்தான் செய்கிறது. ''தி.மு.கவின் அதிகாரமும், பலமும் தங்கள் உழைப்பை வீணாக்கி விடுமோ?'' என்ற பயம்தான் அது. அதைவிட தலைமை யின் கவலை, இன்னமும் மூன்று மாதத்தில் முடிய இருக்கும் அன்புமணியின் ராஜ்யசபா உறுப்பினர் பத வியை மறுபடியும் எப்படி தக்கவைத்துக்கொள்வது என் பதுதான். பதினெட்டு எம்.எல். ஏக்களை பா.ம.க. வைத்திருந்தாலும் அவர்களுடைய தயவு இல்லாமலே தி.மு.க. - காங்கிரஸ் சார்பில் நான்கு பேரும் அ.தி.மு.க. சார்பில் இரண்டு பேரும் தேர்ந்தெடுக்கப்பட முடியும். இருந் தாலும், ஏதாவது ஓர் அணியோடு சமரசம் பேசி, அன்புமணிக்கு இடம் வாங்கிக் கொடுக்கும் முயற்சிகள் தொடர்கின்றன. இதன் காரணமாக பென்னாகரம் தொகுதி யில் கட்சிகளின் நிலைப்பாடுகூட அதிரடி யாக மாறலாம்.



### திகைப்பு-2

**ஜெ**யலலிதாவை விட்டு எம்.எல்.ஏக் கள் விலகி ஓடிக் கொண்டிருக்கும் நிலை யில், ஒரு தனியார் நிறுவனம் எடுத்த கருத்துக் கணிப்பின்படி, தென்மாவட்டங் களில் அ.தி.மு.கவின் செல்வாக்கு அதல பாதாளத்துக்குப் போய்விட்டது தெரிய வந்ததாம். அதிர்ச்சியடைந்த அம்மா செய் வதறியாது திகைக்கிறார். இதற்கிடையில் தொகுதிப் பொறுப்பாளர், மாவட்டப் பொறுப்பாளர், செயலாளர் போன்ற பதவிகளுக்கு ஆட்களைப் போட்டதில் கசப்பும், கைகலப்பும் நிலவுகின்றன. ''எத்தைத் தின்றால் பித்தம் தெளியும் என்ற நிலையில் இருக்கும் ஜெ.விடமிருந்து, தாம் சசிகலாவிடமிருந்து விலகி விட்டதாகக் கூட அறிக்கை வரக்கூடும்'' என்கிறார்கள் கட்சிப் பிரமுகர் கள். காங்கிரஸைக் கைவசப்படுத்தும் வேலையையும் தொடர்கிறார் ஜெ. அது சாதாரண காரி யமா?

### திகைப்பு-3

**'வி**ருத்தகிரி' படத்தை விரைவில் வெளியிடும் முயற்சியில் மும்முரமாக இறங்கியிருக்கும் விஜயகாந்த் அ.தி.மு.க. வுடன் கூட்டணி அமைக்கும் முயற்சி களைத் தொடங்கி இருக்கிறார். அதன் தொடக்கமாக பென்னாகரம் தொகுதி யிலேயே அக்கட்சியுடன் நெருங்கி வரு வதைத் தெரிவிக்கும் வகையில் ஏதாவது ஒரு முடிவு எடுக்கலாம் என்ற பேச்சும் இருக்கிறது. இது நடக்காத வகையில் ஆளும்கட்சியும் காய்களை நகர்த்துகிறது. ''அ.தி.மு.க.வோடு உறவு கூடாது'' என்ற குரலும் தே.மு.தி.க.வில் இருக்கிறதாம்.

- சஞ்சயன்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம், சென்னை - 63. போன் : 22760612, 22762299,29710350
City Office No.7, முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 22 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 150 மாணவர்கள் தங்கி படித்து வருகினறனர். மேலும் கூடுவாஞ்சேரியில் உள்ள எங்களது குருகுலத்தில் 30 மாணவிகள் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. 1,000/- |
| • மதிய உணவு | ரூ. 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் / வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் ("SHIRI SARADHA SAKTHI PEETAM") என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.

# சுதந்திரத்தின் கதவுகள்!

''நொடியில் எதையும் உதறிவிடும் பரிபூர்ண சுதந்திரத்தைத் தொலைத்து விட்டேனோ?'' - கவிஞர் சமயவேல்.

**தோ**ள்பையை இறுகப் பற்றிக் கொண்டு, மூச்சிரைக்க, புறப் படத் தயாரான பஸ்சில் ஏறி னேன்.

பயணச் சீட்டை, கைப்பையி லிருந்து எடுத்து நடத்துநரிடம் தந் தேன். இரண்டாவது வரிசையைக் காட்டினார். ஜன்னலோர சீட் இல்லை. ஜன்னலோரத்தில் இளம் கன்னியா ஸ்திரீ ஒருத்தி அமர்ந்திருந்தாள். இன் றைக்கெல்லாம் பார்த்தால் இருபத்து ஒன்று அல்லது இரண்டு வயதிருக்கும்.

பையை மேலேற்றிவிட்டு அவள் அருகே அமர்ந்தேன். என் விழிகளில் கண்ணீர் இன்னும் மிச்சமிருந்தது. அருகில் அமர்ந்திருக்கும் சிஸ்டர் கவ னித்துவிடுவார்களே என்று மிகவும் பிரயத்தனப்பட்டு அதை அடக்கிக் கொண்டேன்.

''சிஸ்டர் வாந்தி வர மாதிரி இருக்கு நான் அந்தப் பக்கம் உக் காந்துக்கட்டா'' என்றதும், அவள் சரி யென்று எனக்கு அந்த இருக்கையை விட்டுக்கொடுத்தாள். ஜன்னலுக்கு வெளியே ட்ராஃபிக்கைத் தாண்டி, பசுமைக் காட்சிகள் கடந்து பஸ் எனக் குத் தெரியாத வெளியில் விரைந்து கொண்டிருந்தது. மெல் லிய அழுகை யினூடே என் மனம் பின்னோக்கி நகர்ந்தது.

'**த**னசேகர் ஹேர் ஸ்டைல்' கடையை அடுத்து பவித்ரா





## நட்சத்திர நெடுங்கதை 6

மெடிக்கல் ஷாப். அதையும் தாண்டி மெயின் ரோட்டிலேயே இருக்கிறது திருவின் வீடு. அது நகரத்திலேயே பெரிய டாக்டர் மாதவன் தம்பி யின் அவுட் ஹவுஸ். திருவின் அப்பா, அம்மா இருவருமே டாக்டரிடம் பணி புரிந்தார்கள். திரு அவர்களுக்கு நாலாவது பிள்ளை. அண் ணன் ஜெயபாலன் வொர்க் ஷாப் வைத் திருக்கிறான். வீட்டுக்கு என்றாவதுதான் வரு வான். அந்தச் சிறிய வீட்டில் எப்படி மூன்று பேர் படுக்கிறார்கள் என்று ஆச்சரியப்படுவேன்.

திருவின் வீட்டு காம்பவுண்டுக்குள் நுழை கையிலேயே மரங்களும் வண்ணப் பூச் செடிகளும் என்னை வரவேற்கும். எனக்கு மிக வும் பிடித்த நாகலிங்க மரம் தாண்டி, கொய்யா மரம் கடந்து, அசோக மரங்களிடம் கதைத்துவிட்டு, தரையில் விழுந்து கிடந்த பசிய காய்களை எடுத்துப் பார்த்துவிட்டு, எனக்கு மிகவும் பிடித்தமான செடிகளின் பச் சிலை வாசனையை முகர்ந்து கொண்டே நெடிய பாதாம் மரத்தைத் தாண்டி, அதன் பக்கத்தில் இருக்கும் சிறு செடிகளையும் புற் களையும் மிடுக்க மனமில்லாமல் மிதித்தவாறே திருவின் வீட்டு வாசலை அடைவேன். எப் படித்தான் தெரிந்துகொள்வானோ, அவன் வீட்டில் இருக்கையில் ஒரு முறை கூட நான் அழைத்ததில்லை; கதவைத் தட்டியதில்லை, நான் வாச லுக்கு வரும் கணமும் அவன் வீட்டினுள் இருந்து என்னை வரவேற்க வெளிவரும் கண மும் ஒன்றாக இருக்கும்.



இன்றும் அவ்விதமே நடந் தது. "வா ரம்யா" என்றான் உற் சாகமாக. பெரிய கட்டங்கள் போட்ட அடர் நீலநிறக் கைலி யும் கை வைத்த உள் ளனியனும்

**உமா ஷக்தி**

அணிந்திருந்தான். ஒரு ரூபாய் நாணயம் அளவுக்குத் தோலில் வட்டமாகப் பொத்தல் இருந்தது. அதைப் பார்ப்பதைத் தவிர்க்க நினைத்தாலும் கண்கள் அதையே அடிக்கடி பார்த்தன. 'ஏன் திரு... நல்ல பனியனா வாங்கிப் போட்டுக்கலாம் இல்ல' என்று வாய் வரை வந்த கேள்வியைக் கஷ்டப்பட்டு விழுங்கினேன். திரு காலையில் பேப்பர் போடுவது, பால் போடுவது போன்ற வேலைகளைச் செய்து கொண்டே படிப்பது எனக்குத் தெரியும்.

ஒருமுறை வகுப்புத் தோழி அமித்தா வீட்டுக்குச் சென்றபோது திரு வந்திருந்தான். புத்தகங்களில் ஆரம்பித்து வண்ணங்கள் வரை எங்களின் ரசனைகள், ஈடுபாடுகள் ஒத்திருந்தன. செம்புலப் பெயல் நீர் போல இனிய நட்பினராய் அன்றே உள்ளம் கலந்தோம். அதன் பின் ஒவ்வொரு சனிக்கிழமையும் அவனைச் சந்திக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தேன். நான் கல்லூரியில் எகனாமிக்ஸ் முதலாண்டு படித்துக்கொண்டிருந்தபோது, அவன் அஞ்சல் வழிக் கல்வியில் எம்.ஏ. ஹிஸ்டரி இறுதியாண்டு படித்துக்கொண்டிருந்தான்.

''ரம்மி உனக்குத் தெரியுமா? எங்க வீட்டுல புதுசா ஒருத்தங்க வந்திருக்காங்க'' என்றான்.

''ஊர்லேருந்து அக்காவா?'' என்றேன் ஆவலாக.

''புதுசான்னு சொன்னேன்டி, ஸ்பீக்கர் அவுட்டா?'' என்றான்.

சில சமயம் திரு என்னை வாடி போடி என்று கூப்பிடுவதுங்கூட அழகு. வேறு யாராவது அப்படி சொல்லியிருந்தால் நான் பத்ரகாளியாகிவிடுவேன்.

''அங்க பாரு அதுவே வருது'' என்று அவன் சொல்லி முடிப்பதற்குள் தாவியோடி வந்தது அது.

''ஹேய் எப்படி இங்க முயல்? எங்கேர்ந்து கொண்டு வந்தே... ரொம்ப அழகா இருக்குல்ல'' என்று சந்தோஷத்தில் குதித்தேன்.

''அதோட பேரு ரம்யா'' என்றான் திரு.

''என்னது என் பேரா..?'' என்றேன் ஆச்சரியத்துடன்.

''ஆமா...'' என்றான்.

''ஏன் திரு என் பேரை வைச்சிருக்கே..?'

''நீ எவ்வளவு மென்மையானவ... அது போலத்தான் அதுவும்...'' என்றான்.

அதன்பின் அவன் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தான். வழமை போலவே அவன் அம்மா எனக்கு டீ கொண்டு வந்து தந்தார்கள். எதுவும் என் மனத்தில் பதியவில்லை. அவன் அன்பில் உறைந்து போயிருந்தேன்.

திருவைப் பார்க்க வருகையில் காரில் வருவதைத் தவிர்ப்பேன். பஸ் அல்லது ஆட்டோவில்தான் வருவேன். திரும்பிப் போகும்போது கட்டாயம் பஸ்தான். பஸ் ஸ்டாப்வரை பேசிக்கொண்டே நடப்



**கண்ணாடி!**

தூரிகை இல்லை...
வண்ணங்கள் இல்லை...
ஆனாலும்
அருகில் வந்தால்
அச்சு பிசகாமல்
அசலாய் வரையும்
ஒப்பற்ற ஓவியன்!

-கி.டி.ஹேமமாலினி

போம். இரண்டு மூன்று பஸ்களை வேண்டுமென்றே ஏறாமல் தவிர்ப்பேன். சில சமயம் லேட்டாகிவிட்டால் பஸ்ஸின் பின்னே சைக்கிளில் வருவான். என் நிறுத் தம் வந்து நான் வீட்டுக்குள் செல்லும் வரை அவன் சைக்கிள் என்னைப் பின் தொடரும். எனக்குள் சிரித்துக் கொள் வேன்.

ஒருமுறை அவன் அம்மாவிடம் பத்தா யிரம் ரூபாய் கொடுத்து, ''செலவுக்கு வைத் துக் கொள்ளுங்கள்'' என்றபோது வாங்க மறுத்துவிட்டார். ''தம்பி திட்டும்மா வேணாம்'' என்றார். ''அவன் மேல இவ் வளவு பிரியமா இருக்கியே... அவனைக் கட்டிக்கப் போறியா?'' என்று வெளிப் படையாகக் கேட்டார். நான், ''ஆமாம்'' என்றேன். அவர் முகம் மலர்ந்து, ''நினைச் சேன், நீங்க ரெண்டு பேரும் பேசிக்கச் சொல்லியே இப்படித்தான் இருக்குமின்னு, நல்லா இருந்தா சரி. உங்க வூட்டுல ஒத்துப் பாங்களா, நீங்க பணக்கார வூட்டுப் பொண்ணு. திரு இன்னும் வேலைக்கே போவலை. நீ பெரிய படிப்பு படிக்கக் கிட்டிருக்கியாம், திருநாவு உன்னைப் பத்திப் பெருமையா பேசும். இதெல்லாம் சரியா வருமா? நல்ல ரோசனை பண்ணிக்க, சரிப்படாதுன்னு தோணிச்சுன்னா விட்டுடு, என்னைத் தப்பா நினைச்சிக்காதேம்மா'' என்றார்.

என் காதல் விஷயம் வீட்டில் தெரிந்து பூகம்பம் வெடித்தது. சத்யாகிரகம் இருந்து திருவுக்கும் எனக்கும் இடையே இருக்கும் அன்பின் நெருக்கத்தைப் புரியவைத்து, இறுதியில் என் பிடிவாதமே வென்றது. திருவின் திருமதி ஆனேன்.

**''எதுக்காக ஜெயில்ல இருந்து தப்பிச்சே?''**

**''உள்ளே இருக்கற எங்கிட்டயும் மாமூல் கேட்டு போலீஸ் நச்சரிக்குதே எசமான்.''**

**- அம்பை தேவா**



**யோ**சித்துக் களைத்துப் போனேன். என் முகத்தைப் பார்த்த சிஸ்டருக்கு என்ன புரிந்ததோ, மென்மையாகப் புன்னகைத் தாள்.

''கோயமுத்தூருக்கா?'' என்றேன்.

''ஆமாம்'' என்றாள்.

''என் பேரு ரம்யா'' என்றேன்.

''லீனா பாலொஸ்'' என்றாள் மென்மை யாக.

மனத்தில் ஆறாத ரணமொன்றின் வலி விழி வழியே அவ்வப்போது ததும்பிக் கொண்டிருப்பதைக் கைக்குட்டையில் லீனா சிஸ்டர் அறியாவண்ணம் துடைத்துக் கொண்டிருந்தேன். அதையும் மீறி அவள் கவனித்து விட்டாள்.

''ரம்யா, பஸ்ல ஏறினதிலேர்ந்து கவனிச் சுட்டு வர்றேன், உங்க மனசுல ஏதாவது வருத்தமா? எதுவா வேணா இருக்கட்டும், நீங்க எல்லா கவலையையும் கடவுள்கிட்ட ஒப்படைச்சிடுங்க. உங்களுக்காக நான் பிரார்த்தனை பண்றேன். ப்ளீஸ் காம் டவுன்'' என்றாள் பரிவாக.

ஏதாவது ஒரு ஆறுதல் கரம் கிடைத்தால் பற்றிக்கொள்ளும் மனநிலையில் இருந் தேன்.

''சொல்லுங்க ரம்யா... என்னை நீங்க நம்பலாம். வெளிய சொன்னா துக்கம் குறையும், மனசுக்குள்ள வைச்சு மறுகிக் கிட்டு இருக்காதீங்க. கம் அவுட்.''

வாழ்க்கை அவ்வப்போது நம்பிக்கையின் நிழலை நம் முன் காட்டத்தான் செய்கிறது. அது போன்ற ஒன்றுதான் இது என நினைத்தவாறே சொன்னேன்,

''நேத்து ராத்திரி என் வீட்டுக்காரர் என்னை அடிச்சிட்டார். இதோ பாருங்க, இந்தப் பக்கக் கன்னத்துல இன்னும் வீக்கம் இருக்கு. என்னை இந்த முப்பது வயசுல யாரும் கைநீட்டி அடிச்சதில்லை. நேத்து வழக்கம் போல பிரச்னை. பேச்சு தடிச்சு சண்டையா மாறி என்னை ரொம்ப அடிச்சிட்டார். நான் அதிர்ச்சியிலேர்ந்து மீண்டு சரியாகறதுக்கே ரொம்ப நேரம் ஆச்சு. காலைல எதுவும் சாப்பிடலை. அவர் எதுவும் பேசலை, எக்கேடு கெட்டு ஒழிஞ்சாலும் சரின்னு அவங்க அம்மாகிட்ட சொல்லிட்டிருந்தாரு. அவர் பேசின ஒவ்வொரு வார்த்தையும் என்னைச் சுத்திச் சுத்தி வருது. என்னால் மறக்கவே முடியாத அளவுக்கு மனசையும் உடம்பையும் காயப்படுத்திட்டார். இனி எதுக்காக இவரோட வாழணும்ங்கற அளவுக்கு வெறுத்துப் போயிட்டேன். அதான் கால் போன போக்கில கிளம்பிட்டேன்.''

''ஓ காட்... ஸாரி ரம்யா. உங்களோட வேதனை எனக்குப் புரியுது. ஆனா வீட்டுல சொல்லாம இப்படி கிளம்பி வந்திட்டீங்களே, தேடுவாங்க இல்ல...''

''நல்லா தேடட்டும். கொஞ்சமாவது பதறட்டும் சிஸ்டர். என்னோட வலி அவருக்குப் புரியணும். கொஞ்சமாவா அழுதிருக்கேன். ஒவியமா வளர்த்தாங்க எங்க வீட்டுல... எனக்கு என்ன குழந்தை ஆசை இல்லாமலா இருக்கு? இதை வச்சே என் மாமியாரும் புருஷனும் அவமதிக்கறாங்க. இத்தனைக்கும் நாங்க காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கிட்டோம். எங்கப்பா நல்ல வசதியானவர். இவருக்கு ஒரு பிஸினெஸ் வச்சுக் கொடுத்து முன்னேத்தி விட்டாரு. இவரும் முதல் ரெண்டு வருஷம் பிரியமாதான் இருந்தாரு... யாரு எப்ப எப்படி மாறுவாங்கன்னுதான் தெரியாதே... நான் வாழ்க்கையில ரொம்ப ஏமாந்துட்டேன் சிஸ்டர்... சலிப்பும் வெறுப்புமா இருக்கு. என்ன செய்ய? என் அப்பா அம்மாகிட்ட போய் பல தடவை அழுதுட்டேன். நீயே தேடிக்கிட்டது தானேன்னு அவங்களும் அழறாங்க. அதான் எங்கேயாவது கண்காணாத தூரமா போய்டலாம்ன்னு இந்த பஸ்ல ஏறிட்டேன்.'' மூச்சு விடாமல் பேசியதில் படபடப்பு அதிகமாகின.

சிஸ்டர் லீனா தன் பெரிய துணிப்பையிலிருந்து வாட்டர் பாட்டிலைத் திறந்து என்னிடம் நீட்டினாள்.

''இதப் பாருங்க ரம்யா. யாருக்குத்தான்



## கேள்வி பயம்!

ரமண மகரிஷிக்கு பால பருவத்தில் பாடம் நடத்திய ஆசிரியர் ஒருவர், ரமணர் பகவானாக அறியப்பட்டபின் ஆசிரமத்துக்கு வந்தார். ஆதிநாள் சிஷ்யனை ஆதிமகாகுருவாக உணர்ந்து, 'ஆன்மிக வினாக்களை' அவரிடம் கேட்டார் ஆசிரியர். ''ஆஹா! பள்ளிக்கூடத்தில் நீங்கள் கேட்ட கேள்விகளுக்குப் பயந்துதான் ஓடி வந்தேன். இங்கேயும் கேள்வி கேட்க வந்துவிட்டீர்களே!'' என்று சிரித்தார் ரமணர்.

-நெ.இராமன்,
சென்னை-74.

பிரச்னை இல்லை. பதினைஞ்சு வயசுல எனக்கு ஏற்பட்ட மனக்கசப்புல வாழ்க்கையே வெறுத்துட்டேன். ஆனா அதுக்குன்னு நான் அப்படியே இருந்துடலே. எனக்கு எது தேவைன்னு தீவிரமா யோசிச்சப்போ, நிம்மதிதான் தேவைன்னு தோணுச்சு, அதான் கர்த்தரின் ஆணையால் இந்தத் தூய வாழ்க்கையை மனசாரத் தேர்ந்தெடுத்துக்கிட்டேன். மன உறுதியும் இறை நம்பிக்கையும் எப்பவும் யாரையும் கைவிடாது'' என்று எனக்காக அவள் பிரார்த்தனை செய்தாள். என்னிடம் அடுத்த பஸ்ஸில் வீட்டுக்குத் திரும்பிப் போகுமாறு அறிவுறுத்தினாள். ஆனால். பிறவியிலேயே என்னுடன் உருவாகியிருந்த வீம்பும் பிடிவாதமும் கோயமுத்தூரின் தியான மையம் ஒன்றினை நோக்கி என்னைச் செலுத்தியது. என்னுடைய செல்போனில் சார்ஜ் இல்லை. யார் அழைத்திருந்தாலும் அழைக்காவிட்டாலும்எனக்கு இனி கவலையில்லை என்னும் மனநிலையில் இருந்தேன்.

**வெற்றிடங்களையெல்லாம் தன் நீலத்தால் நிரப்பியபடி இருந்தது வானம்.**



**சி**று வயதில் சூரிய நமஸ்காரமும், ப்ராணாயாமும் செய்து பழகியவளாததால், அங்கு என்னால் எளிதில் ஒன்ற முடிந்தது. மூன்று நாட்கள் அங்கே அறை எடுத்துத் தங்கிவிட்டேன். வாசிப்பதும், இயற்கையை ரசிப்பதும், காலாற நடப்பதும், பக்கத்தில் இருந்த சிவன் கோயிலுக்குச் செல்வதுமாய் என்னுடைய பொழுதுகள் ஏற்கெனவே கட்டமைத்தது போன்ற ஒழுங்குடன் சென்றன.

இப்போது வீடு தன் மாயக்குரலால் மெல்ல என்னை வா வாவென அழைக்க ஆரம்பித்தது. பக்கத்து வீட்டுக் குழந்தை கோகுலுக்கு நான் இல்லையென்றால் சோறு தண்ணி இறங்காது. 'ரம்மிமா' என்ற அவன் மழலைக் குரல் என் காதுக்குள் ஒலித்துக்கொண்டேயிருந்தது. என் வயிற்றை மெல்லத் தொட்டுப் பார்த்தேன். இப்போதெல்லாம் கனவில் கூட எனக்கான குழந்தை அழுவதோ சிரிப்பதோ இல்லை. அது எனக்கில்லை என்றபின் ஏன் அதைத் தேடி மனம் சோர்ந்து போக வேண்டும். திரு வேறு திருமணத்துக்குக் கூடத் தயாராகவே இருந்தார் என நினைக்கத் தோன்றுகிறது. நிலையற்ற வாழ்வில் நிலைத்திருப்பதென்பது எதுவுமில்லை, அன்பு கூட அலுத்துப் போகுமோ. திரு? எப்படியெல்லாம் அன்பு செய்தான் ஒரு காலத்தில்! நினைக்கையில் சிரிப்புத்தான் மிஞ்சியது.

தியான மையத்தினர் பள்ளியொன்றைத் தொடங்க இருக்கிறார்கள் எனக் கேள்விப்பட்டு ஆசிரியைக்கான விண்ணப்பத்தை வாங்கிப் பூர்த்தி செய்தேன். குடும்ப விவரங்கள் என்ற பகுதிக்கு எதிரே, 'யாருமில்லை' என்று எழுதினேன். மேலே பார்த்தேன். வெற்றிடங்களையெல்லாம் தன் நீலத்தால் நிரப்பியபடி இருந்தது வானம். சிஸ்டர் வீனாவின் புன்னகை முகம் அதில் தோன்றி மறைந்தது. ●




- போளூர்
ஆர்.பஞ்சவர்ணம்



"என் மாமியார் காதுல போட்டுண்டிருக்கறது ஃபாரின் ஹியரிங் எய்ட்."

"நிஜமாவா?"

"ஆமாம்! மனசுக்குள்ளே திட்டினா கூட கேட்டுட்டு சண்டைக்கு வந்துடுவாங்கன்னா பாரேன்..."

-வி.சாரதி டேச்சு, சென்னை-5

# "ப்ளீஸ்! அதுலயாவது

"ஊருக்குப் போன என் காதலிக்கு ரொம்பவும்தான் குசும்பு!"

"எப்படிச் சொல்றே?"

"எப்படியிருக்கேன்னு ஃபோன்ல நலம் விசாரிச்சா 'ரொம்ப அழகா இருக்கேன்'னு பதில் சொல்றா!"

- அம்பை தேவா





''நானும் வருஷக்கணக்கா ஒரு கம்பெனி தொடங்கி சாதிக்கணும்னு கனவு காண்றேன். ஆசை வெறும் கானல்நீராப் போச்சு'' என்று தொழில் ஆர்வம் உள்ளவர் கள் கவலையுடன் பேசுவதைப் பார்த் திருக்கிறோம். இதில் பலர் அதிர்ஷ் டத்தையும் ஜாதகத்தையும் காரணம் காட்டுவார்கள்: என்னிடம் பணம் இல்லை; படிப்பு இல்லை; உதவும் சொந்தக்காரர்கள் இல்லை; அனு பவம் இல்லை; என் உடல் நலத்தில் பல கோளாறுகள்; பெண்ணாகப் பிறந்துவிட்டேன்... இப்படி பல சாத னையாளர்களுக்கு இந்தக் கார ணங்கள் இருந்திருக்கின்றன. ஆனா லும் அவர்கள் ஜெயித்துக் காட்டி யிருக்கிறார்கள். எப்படி?

**தொழில் தொடங்கப் பணம் வேண்டாம்**

- இந்தியா, அமெரிக்கா, இங்கிலாந்து, ஃபிரான்ஸ், துபாய் போன்ற 18 நாடு களில் 64 உணவகங்கள், 18 பேக்கரிகள். ஆண்டு விற்பனை 120 கோடிக்கும் மேல்! ஹாட் பிரெட்ஸ் (Hot Breads) மகாதேவன் வியா பாரம் தொடங்கியபோது அவரிடம் இருந் பணம் ஐநூறே ரூபாய்.



● கிரன் மஜும்தார் ஷ

- 23 கிளைகள் பழ இறக்குமதி, கால்ந வளர்ப்பு ஆகிய துறைகளில் முத்திரை பதித்திரு கும் கோவை பழமுதிர் நிலையம் தொடங்கியவ சின்னசாமி. அவருடைய முதல் கடை, தள்ளு வண்டி!

**தொழில் தொடங்கப் படிப்பு வேண்டாம்**

- நம்மைப் பேரீச்சம்பழ ரசிகர்களாக்கி 'லயன் டேட்ஸ்' நிறுவன அதிபர் பொன்னுத்துரை யின் படிப்பு பத்தாம் வகுப்பு.



● மார்க் ஸுக்கர்பெர்க்

# Become a பிஸினஸ்

**தொழில் தொடங்கச் செல்வாக்கான குடும்ப பின்னணி வேண்டாம்**

- Bharatmatrimony.com சுமார் பத்து லட்ச திருமணங்கள் நடக்கப் பாலமாக இருந்திருக்கிறது மாதம் 35 லட்சம்பேர் உறுப்பினர்களாகச் சே கிறார்கள். இந்த வெற்றிக் கதைக்கு வித்திட்ட முருகவேல் ஜானகிராமனின் அப்பா, சென்னை துறைமுகத்தில் மூட்டை தூக்கும் தொழிலாளி பதினாறு ஒண்டுக் குடித்தனங்களுக்கு நடுவி ஒரே ரூம் வீடு.

**தொழில் தொடங்க அனுபவம் வேண்டாம்**

- அறுநூறு கோடிக்கும்மேல் வருட வரும

# மேக்னட்!

எஸ்.எல்.வி. மூர்த்தி



* மகாதேவன்



* முருகவேல் ஜானகிராமன்

ணம் தரும் நம் எல்லோருக்கும் பரிச்சயமான ஃபேஸ்புக் (Facebook) தொடங்கியவர் மார்க் ஸுக்கர்பெர்க் (Mark Zuckerberg). கம்பெனி தொடங்கியபோது அவர் இருபது வயதுப் பொடியர்.

**தொழில் தொடங்கச் சிறப்பான உடல்நலம் வேண்டாம்**

● டாமி ஹில்ஃபிகர் (Tommy Hilfiger) வடிவமைக்கும் சட்டைகள், டி ஷர்ட்கள் உலகம் முழுக்கப் பிரபலம். இவர் உரை மாறுபாடு எனத் தமிழில் கூறப்படும் நரம்புக் கோளாறு நோயால் பாதிக்கப்பட்டவர்.

**தொழில் தொடங்க ஆணாக இருக்கவேண்டாம்**

● பயோகான் (Biocon) நிறுவனம் இந்தியாவின் முன்னணி பயோடெக் கம்பெனி. ஆண்டு வருமானம் சுமார் ஆயிரம் கோடி. இதை நிறுவி, தலைமையேற்று நடத்துபவர் திருமதி கிரன் மஜும்தார் ஷா.

● பாரு ஜெயக்ருஷ்ணா. குஜராத் மாநிலத்தில் இவர் குடும்பம் பிஸினஸில் ஈடுபட்டிருந்தது. ஏகப்பட்ட நஷ்டம். கம்பெனி மூடப்பட்டது. குழந்தைகள், குடும்பச் செலவுகளுக்கு சொத்துக்களிலிருந்து வந்த வாடகை வருமானம் போதவில்லை. அஸாஹி ஸாங் கோவன் (Asaahi Songowon) என்ற பெயின்ட்களுக்கான மூலப் பொருட்கள் தயாரிக்கும் கம்பெனியை, தம் 48 வது வயதில் தொடங்கினார். அதன் இன்றைய வருட விற்பனை, இருநூறு கோடிக்கும் மேல்.

**எனில் பிஸினஸ் தொடங்க என்னதான் வேண்டும்?**

● முன்னேறும் வெறி, ரிஸ்க் எடுக்கும் துணிச்சல், தெளிவான இலக்கு, கடும் உழைப்பு, வித்தியாசச் சிந்தனை, நிர்வாகத் திறமை. அவ்வளவுதாங்க... அது போதும்!



பைத்தியக்காரன் என்று அழைப்பதா அல்லது மனநோயாளி என்றா? வான்கோவை எப்படி வகைப்படுத்துவது என்று தெரியாமல் விழித்தது உலகம். அவர் நடவடிக்கைகள் புதிராக இருந்தன. அவர் ஓவியங்கள் அதைவிடப் புதிராக இருந்தன. தம்முடைய படைப்பை எல்லோரும் உதாசீனம் செய்கிறார்கள் என்ற மன அழுத்தம் வான்கோவைப் படுத்தி எடுத்தது. ஒரு சமயம் தமது காதைத் தாமே அறுத்துக் கொண்டார் வான்கோ. காரணமே இல்லாமல் திடீரென்று வரைவதை நிறுத்திக் கொண்டார். அதே போல் காரணமே இல்லாமல் திடீரென்று பேய்த்தனமாக வரையத் தொடங்கினார். தம் வாழ்நாளின் கடைசி இரண்டு மாதங்களில் மட்டும் வான்கோ வரைந்த ஓவியங்களின் எண்ணிக்கை எண்பது.

ஒரு நாள், பிரஷ்ஷை ஓர் ஓரமாக வைத்துவிட்டு, சட்டையை மாட்டிக்கொண்டு வாக்கிங் கிளம்பினார். நடந்துகொண்டே இருந்தார். என்ன நினைத்துக்கொண்டாரோ தெரியவில்லை. ஓர் இடத்தில் அப்படியே ஆணி அடித்ததைப் போல் நின்று தம் சட்டைப்பையில் வைத்திருந்த துப்பாக்கியை எடுத்து, மார்பில் வைத்துத் தம்மைத் தாமே சுட்டுக்கொண்டு செத்துப்போனார்.

சிறையில் இருந்த மண்டேலாவிடம் பலமுறை தென் ஆப்பிரிக்க அரசாங்கம் பேசிப்பார்த்தது. முடிவில், நாட்டின் அதிபரே சிறைக்கு வந்தார். ''உங்களுக்கு வயது என்ன கொஞ்சமா நஞ்சமா? எதற்கு இங்கே கிடந்து அவதிப்படவேண்டும்? இனி அரசியலில் ஈடுபடமாட்டேன் என்று ஒற்றை வரி எழுதிக்கொடுத்துவிட்டால் உங்கள் கிராமத்தில் கொண்டுபோய் விட்டுவிடுகிறோம். என்ன சொல்கிறீர்கள்?''

மண்டேலா அமைதியான, அதே சமயம் தீர்மானமான குரலில் பதிலளித்தார். ''நான் ஒரு ஆயுள் தண்டனைக் கைதி. நீங்கள் சிறைக்கு வெளியில் இருந்து என்னுடன் பேசிக்கொண்டிருக்கிறீர்கள். ஒரு கைதியுடன் பேரம் பேசுவது முறையல்ல. நியாயமும் அல்ல. சமமான நிலையில்

* மண்டேலா



இருக்கும் இருவர் தான் பேச்சுவார்த்தை நடத்தமுடியும். என் விடுதலை பற்றி நீங்கள் கவலைப்படவேண்டாம். நான் காத்திருக்கிறேன்.'' இருபத்தேழு ஆண்டுகளுக்கு மேல் மண்டேலா காத்திருக்கவேண்டியிருந்தது. மிக மோசமான சூழல். கடுமையான கெடுபிடிகள். சிறைக்கு வந்த முதல்நாளே அதிகாரியுடன் மோதல். கறுப்பர்களுக்கு ஏன் அரைக்கால்சட்டை

என்று சண்டையிட்ட போது, அவருக்கு முழுக் கால் சட்டை ஒன்றை வழங்கினார்கள். நன்றி சொல்லி வாங்கிக் கொண்டு வந்துவிட வில்லை. ''என்னுடன் இருக்கும் அனைவருக்கும் வழங்குங்கள், நான் அணிந்துகொள்கிறேன்'' என்றார். அனைவருக்கும் வழங்கப்பட்டது.



நினைத்தீர்களா?'' மண்டேலாவின் ஓவல் வடிவ முகத்தில் புன்னகை பெரிதாக மலர்ந்தது. அவர் அளித்த பதிலை உலகம் குறித்து வைத்துக்கொண்டது. ''நான் நம்பிக்கைகளால் கட்டமைக்கப்பட்டவன்.

# சிறைக்குள் வெளிச்சம்

சிறைக்குள் கைதிகளை ஒன்று திரட்டினார். இத்தோடு வாழ்க்கை முடிந்துபோனது என்று சரிந்து கிடந்தவர்களிடம் உரையாடி, விழிப்படையச் செய்தார். கைதிகள் சார்பாக அதிகாரிகளிடம் முறையிட்டார். புகார்கள் அளித்தார். உணவு, உடை என்று உரிமைகள் மறுக்கப்பட்டால் வாதாடினார்.

''சிறைக்கு வெளியேதான் நிறஒதுக்கல், இங்குமா?'' என்று சீறினார்.

சிறிய விஷயம், பெரிய விஷயம் என்னும் பேதம் இல்லாமல் அனைத்துக்காகவும் போராடினார். எதுவும் உடனே நடந்துவிடாது. 'அப்புறம் பார்க்கலாம்' 'பிறிதொரு சமயம்' என்று தட்டிக் கழித்துக்கொண்டேதான் இருப்பார்கள். விடாமல் நிழல்போல் தொடர்ந்துகொண்டிருந்தார். கோரிக்கை பூர்த்தி செய்யப்படும்வரை ஓய்வதில்லை.

''எப்படி உங்களால் இத்தனை ஆண்டுகளைச் சிறையில் கழிக்க முடிந்தது? மீள்வேன் என்று

இது இயல்பில் அமைந்ததா அல்லது கற்றுக்கொண்ட பண்பா என்று சொல்லத் தெரியவில்லை. நம்பிக்கையுடன் இருப்பது என்பதன் பொருள், சூரியனை நோக்கித் தலையை உயர்த்தி, கால்களை வீசி நடந்து செல்வது. மனிதர்கள் மீது எனக்குச் சில சமயம் அவநம்பிக்கை ஏற்படுவதுண்டு. ஆனால், அதற்காக நான் விரக்தி அடைந்ததில்லை. அப்படிச் செய்யவும் மாட்டேன். அவ்வாறு செய்வது தோல்வியடைவதற்குச் சமமானது. அல்லது, இறப்பதற்குச் சமமானது.''

வான்கோ, மண்டேலா இருவரையுமே உலகம் சாதனையாளர்களாகத்தான் பார்க்கிறது. என்றாலும், வான்கோவை நிராகரித்துவிட்டு, மண்டேலாவிடம் இருந்து கற்றுக்கொள்ள ஒரு முக்கிய பாடம் இருக்கிறது. **தன்னம்பிக்கை! அது இல்லாததால் வான்கோ தம்மைத் தாமே சாகடித்துக்கொண்டார். அது இருந்ததால் மண்டேலா தம்மையும் தம் சமூகத்தையும் மீட்டெடுத்தார்.** ●

மருதன்

# கடவுளின்

''அனுப்ரியா... இங்கே பாருங்க. நம்ம இஸ்மாயில் செய்ய றாப்ல செய்யுங்க!'' - குரல் கொடுக் கிறார் ஆசிரியை. திரும்பிப் பார்க் கிறார் அனுப்ரியா. ஆறு மாதங் களுக்கு முன்புவரை 'பெயர்' சொல்லி அழைத்தால் 'வேறு' யாரையோ என்றிருக்கிற அந்தக் குழந்தைகள், தங்கள் பெயரைக் கேட்டதுமே தற்போது சட்டெனத் திரும்பிப் பார்க்கின்றன. எல்லாம் 'யோகா' செய்து வந்துள்ள 'மாயம்' எனக் கூறுகின்றனர் சிதம்பர பள்ளி ஆசிரியைகள்.

திருச்சி அருகே கே.சாத் தனூரில் இயங்கி வரு கிறது, மாற்றுத் திறன் படைத்தோர்க்கான 'இன்டேக்ட்' சிறப்புப் பள்ளி. அறுபத்தைந்து சிறப்புக் குழந்தைகள். அவர்களில் நாற்பது குழந் தைகள் அங்கேயே விடுதி யில் உள்ளனர்.

**“சிறப்புக் குழந்தைகளிடம் வாடா, போடா, வாடி, போடி என்று நாங்கள் பேசுவதில்லை”**



செவ்வக வடிவ நீள அறை. வரிசையாக அமர்ந்து, நின்று யோகா சனம் செய்கின்றனர். அவர்கள் அத்தனை பேரும் மாற்றுத் திறன் படைத்தோர் என்பது குறிப்பிடத்தக் கது. ஒரு வரை ஒருவர் சீண்டிக் கொள்வதில்லை. நெருக்கடியளித்து முந்துவதில்லை. இது நமக்கென ஒதுக்கப்பட்ட நேரம், நமக்கான பயிற்சி, இதனை நழுவ விடக் கூடாது என்கிற எண்ணம். புதிதாய் மண்ணிலிருந்து முளை விடும் பயிர் போல, இந்த இயக்கம் எவ்விதம் இவர்களுக்கு முளைவிட் டது? உடல் நலம், மன நலம் இரண்டையும் பேணிக் காக்கும் யோகா சனமே இவற்றுக்கெல் லாம் அடிப்படைக் கார ணம் என்கின்றனர் பள்ளி ஆசிரியைகள்.



* கருணா எபநேசர்

''தமக்கே உரித்தான அன்றாட அடிப்படைக் காரியங்களை, தனித்து இவர்களால் செய்ய இயலாது. சாதாரண நிலை யில் உள்ளவர்களைக் காட்டிலும், இவர்களுக் கான யோகாசனப் பயிற்சிகள் சற்று இலகுவாக அமைத்துக் கொடுக்கப்பட வேண்டும். யோகா வின் ஆரம்பக் கட்டத்துக்கும் முன்னதான நிலை யில் அவர்களுக்கு சிறப்புப் பயிற்சி தருவது,

மாற்றுத்திறன் படைத்தோரின் உடல் நலனிலும் மன நலனிலும் நல்ல முன்னேற்றம் அடையச் செய்யும்!'' எனக் கூறுகிறார் யோகா மாஸ்டர் ப.விஜயகுமார்.

''கடந்த மூணு வருசமா குழந்தைகளுக்கு யோகா சொல்லித் தர்றோம். பல விஷயங்கள்ல அதுங்கள்ட்ட கொஞ்சம் கொஞ்சமா மாற்றங்கள் வருது. முக்கியமா சிறப்புக் குழந்தைகள்ட்ட வாடா, போடா, வாடி, போடி என்று நாங்கள் யாரும் குறிப்பிட்டுப் பேசுவதில்லை. வாங்க, உட்காருங்க, போய்ட்டு வாங்க என்றுதான் பேசிப் பழகி வர்றோம். பொதுவா சிறப்புக் குழந்தைகளோட பலம், பலவீனம் ரெண்டையும் அடையாளம் கண்டு (ஒவ்வொரு குழந்தைக்கும் அது மாறும்), அதுக்கேத்தாப்புல யோகா பயிற்சி





இமை!

தந்து வர்றோம். அவங்களும் நல்லா செய்றாங்க!'' எனக் குறிப்பிடுகின்றனர் ஆசிரியைகள்.

''ஆட்டிசம், மூளை முடக்குவாதம், டவுன் சிண்ட்ரோம், நீர்த்தலைக் கொல்லி மற்றும் சிறு தலைக்கொல்லி, மூளை வளர்ச்சி குன்றியோர் என மாற்றுத்திறன் படைத்தோர்க்கான பள்ளி இது. தினசரி யோகா, எங்கள் பள்ளிக் குழந்தைகளின் மன நலத்தையும் உடல் நலத்தையும் பெரிதும் உயர்த்தியுள்ளது. அவர்களின் அன்றாடக் கடமைகளை அவரவர்களே தனித்து செய்து கொள்ளுமளவுக்கு, யோகா அவர்களை அடுத்த கட்டத்துக்கு நகர்த்தியுள்ளது. உடல், மனம், மூச்சு இந்த மூன்றின் சேர்க்கையே உயிர் வாழ்க்கை. இந்த மூன்றினையும் சீர்ப்படுத்த யோகாசனம் பெரிதும் உதவுகிறது. கடவுள்... யோகாவின் மூலம் இக் குழந்தைகளை இமை போல் காக்கிறார்!'' எனச் சொல்கிறார் இன்டேக்ட் பள்ளி முதல்வர் கருணா எபநேசர்.

**– இருள்நீக்கியான்**





# அசாத்தியங்களின் சாத்தியம்

குதிரை பறக்க முடியுமா...? சாத்தியமா?

அசாத்தியங்களைச் சாத்தியமாக்கத் தம்மால் முடியும் என்பதைத்தான் இந் ஓவியத்தின் மூலம் சிம்பாலிக்காக உணர்த்துகிறாரோ உதய்குமார்! முப்பத்தைந் வயதாகும் உதய்குமார் பிறந்ததிலிருந்து நடந்ததே இல்லையாம். தசைகள் அசையு தன்மையை இழந்துபோகும், ஸ்பைனல் மஸ்குலர் டிஸ்ட்ரோபி என்ற நோயா பீடிக்கப்பட்டுள்ளார்.

ஒன்பதாம் வகுப்புவரை பயின்றுள்ளார். ''பள்ளியில் படிக்கையில் நேருவின் நூறாவது பிறந்தநாள் விழாவுக்காக நடத்தப்பட்ட மாணவர்களுக்கான ஓவியப் போட்டியில் கலந்துகொண்டு சான்றிதழ் வாங்கியிருக்கிறேன்'' என்கிறார். கண்களில் பெருமிதம்!

லலித் கலா அகாடமியில் பல ஆண்டுகளுக்கு முன்பு ஓவியப் பயிற்சிப் பட்டறை நடந்தது. அதில் மூத்த கலைஞர்களான தக்ஷிணாமூர்த்தி, காலம் சென்ற ஆதிமூலம் இவர்களிடம் பயிற்சி பெற்றதை, பெருமையுடன் நினைவடுக்கில் பதித்திருக்கிறார்.







✱ உதயகுமார்

பலவிதமான ஸ்டைல்களும், டெக்னிக்குகளும் உபயோகப் படுத்தி வரையும் இவருக்கு மிகவும் பிடித்த ஓவியர் வான்கோ (Van Gogh).

இரண்டு ஆண்டுகள் முன்பு இவர் நடத்திய ஓவியக் கண்காட்சியில், பலர் ஓவியங்களை ரிசர்வ் செய்துவிட்டு பின்னர் வாங்கிக் கொள்ளவே இல்லையாம். ''இதனால் பல நேரடி விற்பனைகளை இழந்தேன். அதுபோல பல ஓவியங் களை, பார்த்துவிட்டுத் தருவதாக வாங்கிச் சென்றவர்கள் திருப்பித் தரவே இல்லை. அவர்கள் என்னை நினைவு கூர்வதற்கு வாய்ப்புகளும் காரணங்களும் அதிகம் என அந்த நிகழ்வை எடுத்துக்கொண்டேன்'' என்கிறார்!



சுயமாக நீட்டவோ, மடக்கவோ முடியாத இவரது வலதுகையில் இயங்குபவை கட்டை விரலும், ஆட்காட்டி விரலும்தான்! அவை பேசும் மொழிதான் எத்தனை வசீகரமானது!

கருத்து, புகைப்படம்: **லக்ஷ்மி வெங்கட்ராமன்**

# வாமன தேசங்கள்

## ஜி.எஸ்.எஸ்

8



**சொ**ந்தமாக வீடு வேண்டும் என்று நினைக்கிறீர்களா? அதில் 1,788 அறைகள் இருக்கட்டுமே!

கார் அவசியம் என்று எண்ணுகிறீர்களா? சுமார் ஆயிரம் கார்களாவது வாங்கினால்தானே நல்லது.

- இப்படியெல்லாம் யாராவது அவருக்கு ஆலோசனை சொன்னார்களா? தெரியாது. ஆனால் ப்ரூனே சுல்தானிடம் இப்படிப்பட்ட ஓர் அரண்மனையும், இவ்வளவு கார்களும் உள்ளன. (500 ரோல்ஸ் ராய்ஸ் கார்களை ஒரே சமயத்தில் வைத்திருந்ததற்காக கின்னஸில் இடம் பிடித்தவர் சுல்தான்).

உலகின் மிக வளமான மனிதர்களில் ஒருவரான ப்ரூனே சுல்தானின் பெயர் சுல்தான் ஹஸ்ஸனல் போல்கியா. 'உலகின் மாபெரும் தங்குமிடம்' என்ற பெருமை கொண்ட இவரது 'இஸ்தானா நூருல் இமான் அரண்மனை'யின் பரப்பளவு 2,00,000 சதுர மீட்டர். ('பிரம்மாண்டமான' நமது ராஷ்ட்ரபதி பவனின் பரப்பளவு 19,000 சதுரமீட்டர்). ப்ரூனே நதிக்கரையில், ப்ரூனேவின் தலைநகரத்தின் (வாண்டார் ஷெரி பெகவான்) தெற்கில் அமைந்துள்ள அரண்மனை இது.

'நம்ம அரண்மனை' என்ற உரிமையோடு ப்ரூனே மக்கள் இந்த அரண்மனைக்குள் எப்போது வேண்டுமானாலும் நுழைந்து வாய்பிளக்க முடியாது. வருடத்துக்கு மூன்று நாட்கள் மட்டும்தான் அனுமதி. அதாவது நோன்பு மாதத்துக்குப் பிறகு வரும் மூன்று நாட்கள். அப்போது தினமும் ஒரு லட்சத்துக்கும் அதிகமானவர்கள் இங்கு வந்து பிரமிக்கிறார்கள். அனைவருக்கும் அப்போது இலவச உணவு உண்டு. குழந்தைகளுக்கு நாணயங்கள் அடங்கிய இலவசப் பைகள் உண்டு. அரண்மனையில் ஒரு பெரும் மசூதி உண்டு. அதில் மட்டும் தனி வாயில் வழியாக ரம்ஜான் மாத வழிபாடு செய்யலாம்.

**தெ**ன்கிழக்கு ஆசிய நாடான ப்ரூனே 20ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பெரும் வளர்ச்சி கண்டது. இன்று தொழில்வளத்தில் முன்னேறி 'வளர்ந்த நாடுகள்' பட்டியலில் இடம்பெற்றுவிட்டது இந்த வாமன தேசம். மனித முன்னேற்றக் குறியீட்டில் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் (சிங்கப்பூர்



தது. இதற்கு பிரிட்டனின் ஆதரவும் இருந்தது. மலேசியக் கூட்டமைப்பிலிருந்து விலகிவிடலாம் என்று முடிவு செய்திருந்த ப்ருனே சுல்தான், இந்தப் புரட்சிக்குப் பிறகு அந்த முடிவை மாற்றிக்கொண்டார்.

முடியாட்சி என்றால் பத்திரிகை சுதந்திரம் இருக்குமா? ப்ருனேவிலும் அது கிடையாது. அரசே ஒரு தொலைக்காட்சி சேனலையும் மூன்று ரேடியோ ஸ்டேஷன்களையும் உருவாக்கி நிர்வகிக்கிறது.

ப்ருனேவின் 'ஹலால்' திட்டம் சுவாரஸ்யமானது. அதாவது (தயாரிப்பாளர்கள் அனுப்பி வைத்தால்) ப்ருனே மற்றும் பிற நாடுகளில் உற்பத்தியான பொருட்களை, ப்ருனே அரசு நிறுவனமொன்றின் பிரதி

# கின்னஸ் மன்னன்!

மற்றும் ஹாங்காங்குக்குப் பிறகு) மூன்றாமிடம் ப்ருனேவுக்குத்தான்.

பதினாறாம் நூற்றாண்டு முடிவுப்பகுதியில் ஐரோப்பா - முக்கியமாக ஸ்பெயின் - ப்ருனேவில் கால்பதித்தது. ஆக்கிரமிக்கும் எண்ணம்தான். ஆனால் தொடர்ந்த போரில் சுல்தான் வென்றார். எனினும் நாட்டின் சில பகுதிகள் ஸ்பெயின் வசமாகின. இரண்டாம் உலகப்போரின்போது ப்ருனேவை ஜப்பான் ஆக்கிரமித்தது.

ஒரு வழியாக பின்னர் முடியாட்சிக்கே திரும்பியது. எனினும் 1960களில் முடியாட்சிக்கு எதிராக ஒரு பெரும் புரட்சி வெடித்



• ப்ருனே சுல்தான்



● அரண்மனையின் தோற்றம்!

நிதிகள் பலவிதங்களிலும் சோதனை செய்து 'ஹலால்' முத்திரை குத்துவார்கள். அதாவது, இஸ்லாமிய நெறிமுறைகள் மற்றும் சட்டங்களுக்கு உட்பட்டுதான் அந்தப் பொருள் தயாரிக்கப்பட்டிருக் கிறது என்பதற்கான ஆதாரம் அது. அடிப் படைப் பொருட்கள், செயல் முறை, விநி யோக முறை என்று பல கோணங்களி லும் பரிசோதித்த பிறகுதான் ஹலால்!

இங்குள்ள மக்களில் 66 சதவிகிதத்தினர் மலாய் இனத்தவர். 11 சதவிகிதம் பேர் சீனர்கள்.

மதுவிலக்கு பூரணமாக உண்டு. விற் பனை, அருந்துதல் இரண்டுக்குமே தடை. வெளிநாட்டினரும் முஸ்லிம் அல்லாத வரும் பன்னிரண்டு கேன் பீர் மற்றும் இரண்டு பாட்டில் பிறவகை மது ஆகியவற் றைக் கொண்டுவர அனுமதி உண்டு. தங் களது ஹோட்டல் அறைக்குள்தான் அருந்த லாம்.

ஆறாம் நூற்றாண்டில் சீனாவுடன் வணி கம் செய்த நாடுதான் ப்ருனே. பதின்



● ப்ருனே நாட்டு பணத்தில் சுல்தான் படம்...

மூன்றாம் நூற்றாண்டில் (தற்போதைய இந்தோனேஷியாவில் உள்ள) ஜாவாவின் அரசோடு கொண்ட தொடர்பினால் ப்ருனேவில் இந்துமதம் கோலோச் சியது. பதினைந்தாம் நூற்றாண்டு தொடக் கத்தில் பல பகுதிகளிலும் பரவிய இஸ் லாமிய அலையில் ப்ருனே ஒரு தனி, சுதந்திரம் பெற்ற 'சுல்தானேட்' ஆனது.

செப்டெம்பர் 2004ல்தான் ப்ருனேவில் பாராளுமன்றம் அறிமுகமானது. (அதற்கு 20 வருடங்களுக்கு முன்பே ப்ருனே சுதந் திரம் பெற்றுவிட்டது!) சுல்தான் போல் கியா மெல்லமெல்ல ஜனநாயகத்தை அங்கு பரப்பி வருகிறார். ஐந்து வருடங்

களுக்கு முன்பு கல்வியில் மதம் நேரடியாகவே புகுத்தப்பட, இதன் காரணமாகப் பல பெற்றோர்கள் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தனர். இதைத் தொடர்ந்து மதத் திணிப்புக்குக் காரண மான நான்கு அமைச் சர்களை வெளியேற்றினார் சுல்தான்.

பிற மதங்களுக்குத் தடை கிடையாது. என்றாலும் இஸ் லாம் அல்லாத நெறிகளைப் பின் பற்றுவதற்கு பலவித நிபந்தனைகள் உண்டு. தனியார்



ஒரே சமயத்தில் 500 ரோல்ஸ்ராய்ஸ் கார்களை வைத்திருந்ததற்காக கின்னஸில் இடம்பிடித்தவர் சுல்தான்!

பள்ளிகளில்கூட (இஸ்லாம் தவிர) மத போதனை கூடாது.

ஆசியாவின் மிகச்சிறந்த மருத்துவ வசதிகள் ப்ருனே மக்களுக்குத் தாராளமாக, குறைந்த செலவில் அளிக்கப்படுகின்றன. மலேரியாவும், காலராவும் முழுமையாக ஒழிக்கப்பட்டுவிட்டன.

*(அடுத்த வாரம்- 'இணைந்து நிற்கும் எட்டு' நாடு)*

## ஆட்காட்டி விரல் -அவமரியாதை!



* மக்கள்தொகை நான்கு லட்சத்தை நெருங்கினாலும், அவர்களில் மூன்றில் ஒரு பங்கினர், அங்குள்ள பல ஒப்பந்தங்களில் ஈடுபட்டு பணியாற்றிக் கொண்டிருக்கும் வெளிநாட்டினர்.
* ப்ருனேவில் இஷ்டத்துக்கு உடை அணியமுடியாது. பெண்கள் முழங்கால் அல்லது அதற்கு மேல் தெரியும் வகையில் உடைகள் அணியக் கூடாது.
* பேசும்போது ஆள்காட்டி விரலை நீட்டிப் பேசுவது மிகுந்த அவமரியாதை! (சிம்பு ப்ருனே போயிருக்கிறாரா?) ஆனால், கட்டை விரலைப் பயன்படுத்தலாம்.
* மிகச் சிறிய நாடுகள் பட்டியலில் இடம் - 61. மிகக் குறைவான மக்கள்தொகை கொண்ட நாடுகளில் இடம் - 58.
* ஒன்பது வருடக் கல்வி கட்டாயம். நாட்டின் கல்வியறிவு சுமார் 95 சதவிகிதம்.
* அருகிலுள்ள மலேசியா மற்றும் இந்தோனேஷிய வம்சாவழிகள் ப்ருனேவில் மிக அதிகம். தவிர முஸ்லிம்கள் என்ற பாலமும் உண்டு. பெண்கள் அணியும் (தலையை மறைத்த) நீண்ட உடைக்கு 'டுடோங்' என்று பெயர். தலையில் குல்லாயோடு ஆண்கள் அணியும் நீண்ட அங்கிக்கு 'ஷாங்கோக்' என்று பெயர். இந்த உடை வெண்மை நிறத்தில் காணப்பட்டால் அவர் ஹஜ் யாத்திரை சென்று வந்தவர் என்று பொருள்.

# மின்னல் கதைகள்

## கோலம்... மனக்கோலம்..!

**சா**ந்தியின் எதிர் வீட்டுக்காரி ராஜி, கோலம் போடுவதில் கில்லாடி. சாந்திக்கோ கோலமே வராது. ஆனால், சாந்தி வீட்டில் வாடகைக்கு இருந்த மஞ்சுதான், ராஜியோடு போட்டி போட்டுக் கொண்டு சாந்தி வீட்டு வாசலிலும் கோலம் போட்டு ஈடுகொடுத்து வந்தாள். மார்கழி சீசன் நேரத்தில் அந்த மஞ்சு திடீரென்று வீட்டைக் காலி செய்ததில் சாந்திக்குத் தீராத வருத்தம்!

இது ராஜிக்கு எத்தனை சந்தோஷமான செய்தி... இனி அவள் வீட்டு வாசலில் மட்டுமே அலங்காரமான மார்கழிக் கோலங்கள் இருக்கும் என்பதை நினைக்கும் போது உறக்கமே வரவில்லை சாந்திக்கு. மறுநாள், ராஜி முகத்தில்






என்.கோமதி

## வேலை

**வே**லைக்கு ஆள் எடுக்கும் தேர்வு . சுறுசுறுப்பாக இயங்கிக்கொண்டிருந்தாள் நிர்வாக அதிகாரி வித்யாவதி. மூன்று இளைஞர்கள் எல்லாக் கேள்விகளுக்கும் பதிலளித்துத் தேர்வாகினர். தகுதிகளும் சரிசமம்!

மூவரில் ஒருவரை எப்படித் தேர்ந்தெடுப்பது என விழிபிதுங்கினாள்.

இறுதியாக மூன்று பேருக்கும் ஐந்து கூடைகள் நிறைய ரோஜாவை எண்ணும் பணி கொடுக்கப்பட்டது. ஏன் இந்தப் பணி

## தாண்டவக்கோன்

விழிக்கப் பிடிக்காது, அதிகாலையில் இருட்டுள்ளபோதே எழுந்து வாசல் பெருக்கி, சாணம் மட்டும் தெளித்துவிட்டு வீட்டுக்குள் ஓடிப் புகுந்துகொண்டாள்.

விடிந்து, மெதுவாகத் தலையை வெளியே நீட்டினால், ராஜி வீட்டு வாசலில் தொடங்கி இவள் வீட்டு வாசற்படி வரைக்கும் அடைத்துக் கொண்டிருந்தது ஒரு பெரிய மார்கழிக் கோலம்.

ராஜியின் தரிசனத்துக்காகக் காத்திருந்தாள் சாந்தி. o

---

எனத் தெரியாமலேயே மூவரும் செவ்வனே எண்ணி முடித்தனர். அவரவர் நண்பர்களை அவர்களிடம் பேசவிட்டு உன்னிப்பாய் மறைந்து கவனிக்கலானாள் வித்யாவதி.

''டேய், இந்த வேலைக்கு இந்தப் பூவையெல்லாம் எண்ணித் தொலைக்கணும்னு என் தலையெழுத்தைப் பாருடா'' - இது முதலாமவன்.

''வேற வேலை கிடைக்கற வரைக்கும் இந்தக் கோமாளித் தனத்தை செஞ்சுதானே ஆகணும் வயித்துப்பாட்டுக்கு'' - இது இரண்டாமவன்.

''பூக்களைத் தொட்டு எண்ணும்போது ஏற்பட்ட உணர்வும் வாசமும் ஒருவித புதுத் தெம்பைக் கொடுத்துச்சு. ரொம்ப ரசிச்சுச் செஞ்சேன்டா'' - இது மூன்றாமவன்.

மூன்றாமவனுக்கே கிடைத்தது வேலை! o



**பவித்ரா நந்தகுமார்**

பூப்பதில்லை. காய்ப்பதில்லை. ஒண்ணரை அடி உயரத்துக்கும் மேலே அந்தச் செடி, வளர்வதுமில்லை. மண்ணுக்குள்ளே அதன் வேர்களில் மகசூல் காண்பது, கொத்துக் கிழங்குகளாக. 'மருந்துக்குக் கூடப் பிரயோசனப்படாது' என அவற்றைக் கூற முடியாது. காரணம், அக்கிழங்குகள் முழுவதுமாகப் பயன்படுவது மருந்துத் தயாரிப்புக்கு மட்டுமே!

கள்ளக்குறிச்சி பகுதிகளில் கடந்த பத்து வருஷமாகப் பயிராகி வருகிறது கோலியாஸ் எனப்படும் இம்மூலிகைக் கிழங்கு. சின்ன சேலம் அடுத்த நரிக்குறவர் காலனி, நைனார்பாளையம், செம்பாக்குறிச்சி, குரால், காளசமுத்திரம் போன்ற கிராமங்களில் பரவலாகப் பயிரிடப்பட்டு வரும் இக்கிழங்கு, அந்தப் பகுதி விவசாயிகளுக்கு அருமையான பணப் பயிர். ''இதன் உற்பத்தியில ஓர் ஆபத்தும் இருக்கு. வெறும் கிழங்காகவோ, உணவுக் கிழங்காகவோ ஒருபோதும் இதனைச் சமைத்துச் சாப்பிட முடியாது. இதனால் உற்பத்தி அதிகரிக்கும்போது, இதன் விற்பனைச் சந்தையில் விலைச் சரிவு ஏற்படுகிறது. மருந்து தயாரிக்க மட்டுமே கோலியாஸ் கிழங்கின் பவுடர் பயன்பட்டு வருவதால், இதன் சாகுபடி பரப்பை அதிகப்படுத்த முடியவில்லை'' எனக் கூறுகின்றனர், இதனைப் பயிரிட்டு வரும் இப்பகுதி விவசாயிகள்.

''இது உணவு வகைக்கான கிழங்கு இல்லீங்க. திங்கவும் கூடாதுன்றாங்க. ஏன்னு தெரியலை. இந்தக் கிழங்கைப் பவுடராக்கி, அமெரிக்கக்காரன் அப்படியே மருந்து தயாரிக்கறான்னு சொல்லிக்கிறாங்க. கோலியாஸ் கிழங்குனு இங்கிலீசுலு பேரு. தமிழ்ல மருந்து கூர்க்கன் செடி. கோலியாஸ் கிழங்கு சாகுபடி தமிழ்நாட்டிலேயே விழுப்புரம் மாவட்டத்துல



# விமானத்தில் ஏறும் மூலிகைக் கிழங்கு

கள்ளக்குறிச்சி ஏரியாவுல மட்டும்தான் பயிராகுது!'' என நம் ஆவலைத் தூண்டினார் நைனார்பாளையம் கிராமத்தைச் சேர்ந்த மற்றொரு விவசாயி.

''கோலியாஸ் கிழங்குச் செடியோட மேல் தண்டின் நுனிப்பகுதியை வெட்டி எடுத்து நாற்றா நடணும். அந்த நாற்று ஆறு மாசத்துல வளர்ந்துடும். அதான் இதனோட தாய்ச் செடி. ஒரு தாய்ச் செடியிலேருந்து அதிகபட்சமா நூறு தண்டு கிடைக்கும். காட்டுல பார் கட்டி, அந்தத் தண்டுகளைப் பிய்ச்சு எடுத்து நடணும். வாரம் ஒரு தபா தண்ணி விடணும். கோலியாஸ் கிழங்குச் செடி வளர ஆரம்பிக்கும். காட்டுல தண்ணி தேங்க விடக் கூடாது. தண்ணி தேங்குனா மண்ணுக்குள்ளார கிழங்கு அம்புட்டும் அழுகிப் போயிடும். அப்புறம் பாடுபட்ட விவசாயி தலையில, அந்த நட்டம் மொத்தமா வந்து இறங்கும்.

அதனால, சொட்டு நீர்ப்பாசனம் கோலியாஸ் சாகுபடிக்கு ரொம்ப ஏத்தது. கோலியாஸ் கிழங்கு சாகுபடிக்கு உரச் செலவும் ரொம்ப அதிகம் ஆகுறது இல்ல. ஆறு மாசப் பயிரு. அறுவடையான கிழங்கை ஏஜென்டுங்க வந்து வாங்கிப் போறாங்க.

கோலியாஸ் கிழங்கு பவுடர்லேருந்து மருந்து தயாரிக்கறதா சொல்றாங்க. இதய நோய், கணையம், சிறுநீரகம் சம்பந்தப்பட்ட நோய்கள் மற்றும் சர்க்கரை நோயினால் ஏற்படும் மூட்டு வலி போன்றவற்றுக்கு இந்த மூலிகைக் கிழங்கு பவுடர் மருந்தாகப் பயன்படுதுனு சொல்லிக்கறாங்க. ஆறு மாசத்துல ஒரு ஏக்கர் சாகுபடிக்கு அம்பதாயிரம் ரூபாய்வரை லாபம் கெடைக்குது. நா மூணு ஏக்கர்ல கோலியாஸ் சாகுபடி செய்யறேன். கடந்த அஞ்சு வருஷமா!'' என்கிறார். சின்னசேலம் அருகே காளசமுத்திரம் கிராம விவசாயி ராஜமாணிக்கம். கரும்பு பயிரிட்டுக் கரையேற முடியவில்லை என்று கவலைப்படும் விவசாயிகள் கோலியாசுக்கு மாறி விடலாம் என்று தோன்றியது நமக்கு!

செய்திச் சித்திரம்:
**ஸ்ரீரங்கம்**
**திருநாவுக்கரசு**



# கரையேற முடியாத விவசாயிக்கு கோலியாசு ஒரு கோலாகலம் தான்!

## வண்ணத் தூரிகை

சென்ற வருஷத்துக்கு முந்திய வருஷம் கலாசாலை திறந்து சில நாளைக்கெல்லாம் ஒரு நாள் சற்று முன்னதாகவே ராஜாராமன் கலாசாலைக்குச் சென்றுவிட்டான். எனவே, மணி அடிக்கும்வரையில் மாடித் தாழ்வாரத்தில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது ஒரு மோட்டார் வண்டி வந்து கலாசாலை வாசலில் நின்றது. அதில் ஒரு யுவனும் யுவதியும் இருந்தார்கள். முக ஒற்றுமையிலிருந்து அவர்கள் அண்ணனும் தங்கையுமாய்த்தான் இருக்க வேண்டுமென்று தெரிந்தது. இளைஞன் வண்டியிலிருந்து இறங்கினான்; வண்டி அந்த யுவதியுடன் போய்விட்டது. அவள் பெண்கள் கலாசாலைக்குப் போகிறாள் போலும்!

என்னவோ சொன்னான்.

ஏதோ வேடிக்கையாக அவன் சொல்லியிருக்க வேண்டும். அதைக் கேட்டு, அந்தப் பெண் புன்னகை புரிந்தாள்; பளீரென்று ஒரு மின்னல் மின்னுவது போல் இருந்தது.

பரந்த விழிகளுடன் கூடிய அந்தப் புன்னகை பூத்த முகம் ராஜாராமனுடைய உள்ளத்தில் பதிந்தது. 'இவள் ஒரு 'ஸினிமா ஸ்டார்' ஆக வேண்டும்; அப்படி ஆனால் மேனாட்டின் பிரசித்த நடிகைகளையெல்லாம் தோற்கடித்து உலகத்தையே

# கண் பேசும் வார்த்தைகள்!

வண்டி போன பிறகும், அந்தப் பெண்ணின் கண்கள் மட்டும் ராஜாராமனின் எதிரில் தோன்றிக் கொண்டிருந்தன. அம்மா! அந்தக் கண்கள்தான் எவ்வளவு விசாலமானவை! 'கடலினும் பெரிய கண்கள்' என்று கவி வர்ணித்திருப்பது இப்படிப்பட்ட கண்களைப் பற்றித்தான் இருக்க வேண்டும்!

அடுத்த நாளும் ராஜாராமன் சற்று முன்னதாகவே கலாசாலைக்குச் சென்றான். அதே இடத்தில் நின்றான். வண்டியும் அதே நேரத்துக்கு வந்தது. இளைஞன் வண்டியிலிருந்து இறங்கியதும்

விலைக்கு வாங்கிவிடுவாள்' என்று அவன் முதலில் நினைத்தான். 'சீ? இவ்வளவு சௌந்தரியமும் அப்படியா வீணாய்ப் போக வேண்டும்? இவள் மட்டும் தேச சேவையில் ஈடுபட்டால், எவ்வளவு நல்ல வேலை செய்யலாம்? இவளுடைய தலைமையின் கீழ் யார் என்ன தியாகந்தான் செய்யப் பின்வாங்குவார்கள்?' என்று கருதினான். பிறகு, 'இதெல்லாம் நம் தேசத்தில் நினைத்து என்ன பிரயோஜனம்? எந்த அசடு இவளைக் கலியாணம் செய்து கொள்ளப் போகிறதோ? அல்லது ஒரு வேளை முன்னமே ஆகிவிட்டதோ

# அமரர் கல்கி

என்னவோ? கலியாணம் ஆகிவிட்டால் பிறகு எல்லாரையும் போல் ஜனத்தொகையை அபிவிருத்தி செய்துகொண்டு, வாழ்க்கையைத் தள்ளவேண்டியதுதானே?' என்றெல்லாம் எண்ணமிட்டான்.

ராஜாராமன் மறுநாளும் அதே நேரத்தில் அதே இடத்தில் நின்றான். அன்று வண்டி அங்கே நின்றுவிட்டுக் கிளம்பிச் சென்ற போது, அந்தப் பெரிய கண்கள் ஒரு தடவை சுழன்று அவன் மேல் ஒரு வீச்சு வீசி, அவனைத் திகைக்கச் செய்து விட்டு, மறுவினாடி மறைந்தன.

பிறகு, இதே மாதிரி அநேக நாட்கள் நடந்தது. அந்தக் கண்கள் என்னதான் சொல்கின்றன? அந்தப் பார்வையின் அர்த்தந்தான் என்ன? பரிகாசமா? கோபமா? மமதையா? அல்லது...

– **'வைர மோதிரம்' கதையிலிருந்து...**



கண்கள் என்னதான்
சொல்கின்றன?
அந்தப் பார்வையின்
அர்த்தந்தான் என்ன?
பரிகாசமா?
கோபமா? மமதையா?

✱ போராட்டத்தின்போது...



# மூவாயிரம் குரல்கள்!

''உயிரே போனாலும் சோரம் போகக் கூடாதுன்னுதான் மூணு நாலு வீட்ல பத்துப் பாத்திரம் தேய்ச்சு உழைக்கிறோம். ஆனா பாஞ்சாலி சேலையைப் பல பேரு முன்னால உருவுன மாதிரி பத்திரிகைக்காரனுங்க என்னன்னா நம்மள அசிங்க ஜோக்கு போட்டு அவனுங்க சோரம் போயிக்கிட்டு இருக்கானுங்க!'' - திராவகப் பேச்சைப் பேசிய வாயிலிருந்து பசக்கென்று வெற்றிலை எச்சிலைத் துப்புகிறார் முனிராஜம்மா!

அவரைப் போலவே எண்ணெய்காணா தலையோடு, கசங்கிய புடைவையோடு, பத்துப் பதினைந்து பேர் வருவதும் போவதுமாக இருந்தனர் அந்தக் கட்டிடத்துக்கு... அவர்களின் படையெடுப்புக்குக் காரணம்...

திருவான்மியூர் கடற்கரையோரம் அமைந்துள்ள ஜெயராம் நகர் வசந்த் அபார்ட்மெண்ட்டின் கீழ்த்தளத்தில் இயங்கும் 'மனுஷி' என்ற அமைப்பு. உள்ளே நுழைந்தால் தேனீக்கள் கூட்டம் போல சுமார் நூறு பேர் மொய்த்திருக்க, வீட்டு வேலைத் தொழிலாளர்களின் விபத்துக் காப்பீடு திட்டம் பற்றியும், வேலை செய்ய முடியாமல் போனால் வாரியம் வழங்கும் ரூபாய் நானூறு ஓய்வூதியம் மற்றும் கல்வி உதவித் தொகை, திருமண உதவித் தொகை பெறுவதைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தார் கே.ஆர். ரேணுகா.

தேநீர் இடைவேளையின்போது அவரைச் சந்தித்தோம்...

''நான்தான் இந்த 'மனுஷி' நிறுவனத்தை 1993ல் தொடங்கினேன். தமிழகம் முழுக்க சுமார் ஒரு லட்சத்து எண்பதாயிரம் பெண்கள் வீட்டு வேலை செய்வதாக லயோலா கல்லூரி மாணவர்கள் சமீபத்தில் கணக்கெடுத்து இருக்காங்க. தமிழக அளவில் எட்டாயிரம் பேர் வீட்டு வேலைத் தொழிலாளர்களுக்கான எங்க அமைப்பில் சேர்ந்திருக்காங்க.



✱ மேனகா



✱ ஆர்.ராணி

பல ஆண்டுகளாக அரசு இதையொரு தொழிலாகவே மதிக்கலை. நீண்ட போராட்டத்துக்குப் பிறகு 99ல்தான் வீட்டு வேலை

யைத் தொழிலாக ஏற்று உடலுழைப்புத் தொழிலாளர் வாரியத்தில் சேர்த்தது. 2007ல் இவர்களுக்காக தனி வாரியத்தை அரசு அறிவித்தது. இது எங்களின் வெற்றி, சமீபத்தில் சென்னை சேத்துப்பட்டில் வேலை செய்யும் தொழிலாளியை, வீட்டின் உரிமையாளர் கொலை செய்து, அதிகாரத்தால் மறைத்துவிட முயற்சி செய்த போது, எங்கள் தொழிலாள உறுப்பினர்கள் மூவாயிரம் அஞ்சலட்டைகள் எழுதி எதிர்ப்பைத் தெரிவித்து, சரியான நடவடிக்கை எடுக்க வைத்தோம்'' என்கிறார் கே.ஆர். ரேணுகா.



கே.ஆர்.ரேணுகா.

அலுவலகம் விட்டு வெளியே வருகையில் எதிர்ப்பட்ட ஆர்.ராணி...

''எங்களுக்குக் குறைந்த பட்சக் கூலியாக இவ்வளவு கொடுக்கணும்னு கவர்ன்மெண்டு சொல்லணும்னு தான் போராடுறோம். மூணு வீட்ல காலை, மதியம், சாயங்காலம்னு மூணு வேளை வீட்டு வேலை செய்யறேன். மூணு முதலாளிங்க என் ஒருத்தருக்கு. வீட்ல நான்தான் முதலாளி. இன்னாவொண்ணு அங்கேயும் நான்தான் வீட்டு வேலை செய்யணும்'' என்கிறார்!

மேனகாவோ, ''புருஷன் செத்துப்போனபின் பத்து வருஷமா வீட்டு வேலை செஞ்சுதான் எம் புள்ளைங்களைப் படிக்க வெச்சேன். கவர்ன்மெண்டு எங்களுக்குக் கொடுக்கிற சலுகை என்னென்னு சொல்ல எங்களுக்கும் சங்கம் உண்டுன்னு பலருக்குத் தெரியாது. வேலைக்காரியை மட்டமா ஜோக்கு போட்டா... அதைப் படிக்கிற வேலைக்காரிங்களோட புள்ளைங்க மனசு என்னாகும்னு தெரிய மாட்டேங்குதே படிச்சவங்களுக்கு'' என்றார்.



''கல்கி இதழ் அப்படிப்பட்ட ஜோக்குகள் போடுவதில்லை என்பதை கொள்கையாகக் கொண்டிருக்கு'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டோம்.

சுயமுன்னேற்றம் என்பது உழைப்போடு சுயமரியாதையையும் சேர்த்துப் பெறும் வெற்றிக்கான போராட்டம் எனத் தெளிவாக உணர்த்தியது இந்தத் தேனீக்கள் கூட்டம்.

செய்திச் சித்திரம்:
**என்.கருணாநிதி**

**கீ**ழே உள்ள ஒவ்வொரு கேள்விக்குமான உங்கள் உண்மையான விடையைக் குறித்துக்கொள்ளுங்கள். கேள்விகளின் முடிவில் ஒவ்வொரு விடைக்குமான மதிப்பெண் குறிக்கப்பட்டுள்ளது. உங்கள் மொத்த மதிப்பெண்கள் குறித்த மதிப்பீடு இறுதியில்.

1. ஒரு பிரச்னை அல்லது சோதனை ஏற்பட்டால் அதை நீங்கள் எப்படி எதிர்கொள்வீர்கள்?

(அ) பெரும்பாலும் வருத்தத்தில் துவண்டு போவேன்.

(ஆ) முன்பும் சோதனைகளைச் சந்தித்து மீண்டிருக்கிறோமே என்று ஆறுதல் கொள்வேன்.

(இ) அதை ஒரு சவாலாகவும், என்னை வெளிப்படுத்திக் கொள்ள ஒரு வாய்ப்பாகவும் நினைத்துச் செயல்படுவேன்.

2. மனஅழுத்தம் அதிகமாகும் போது உங்கள் மனநிலை எப்படி இருக்கும்?

(அ) மனபாரம். கூடவே அதைக் குறைப்பதற்கான வழிமுறைகளைப் பற்றிய சிந்தனை.

(ஆ) துக்கம், உடல் ஆரோக்கியக்குறைவு.

(இ) திகைப்பு, வெறுமை.

3. எந்தப் பிரச்னைக்கும் ஒரு தீர்வு உண்டு என்று நினைக்கிறீர்களா?

(அ) அப்படி நினைத்தால் முட்டாள்தனம். பாதிப் பிரச்னைகளுக்காவது தீர்வு என்பது இல்லை.

(ஆ) இருக்கலாம். ஆனால் துரதிர்ஷ்டவசமாக என்னுடைய எந்தப் பிரச்னைக்கும் தீர்வு கிடைப்பதில்லை.

(இ) சந்தேகமென்ன? பூட்டு ஒன்று இருந்தால் அதற்கான சாவியும் தயாரிக்கப்பட்டுதானே இருக்கும்.

4. பிரச்னைகளை உங்களாலேயே தீர்த்துக்கொள்ள முடியவில்லையென்றால் பிறரது உதவியை நாடுவீர்களா?

(அ) ஆம். அப்படிப்பட்ட நம்பகமான உறவினர் அல்லது நண்பர் எனக்கு உண்டு.

(ஆ) எதற்கு வம்பு? அதனால் பிரச்னை பெரிதாகத்தான் வாய்ப்பு.

(இ) ஏற்கெனவே இது போன்ற பிரச்னையைச் சந்தித்து மீண்டவர்களிடம்



# 'டக்'குன்னு



உதவி கேட்பேன்.

5. கீழே உள்ள பாடல் வரிகளில் உங்களுக்குப் பிடித்தது எது?

(அ) உனக்கும் கீழே உள்ளவர் கோடி, நினைத்துப்பார்த்து நிம்மதி நாடு.

(ஆ) சோதனைமேல் சோதனை போதுமடா சாமி.

(இ) மனமே... ஓ மனமே... நீ மாறிவிடு. மலையோ... அது பனியோ... நீ மோதிவிடு.

6. உங்கள் தவறுகளிலிருந்து பாடம் கற்றுக் கொள்கிறீர்களா?

(அ) நானா? தவறு செய்வதா? ஒருக்காலும் இல்லை.

(ஆ) பாடம் கற்றுக்கொள்வதும், அதை அவ்வப் போது மறந்துபோவதும்தானே வாழ்க்கை?

(இ) நிச்சயம். அனுபவத்தை விட சிறந்த ஆசான் உண்டா?

7. முக்கியமான தீர்மானங்களை எப்படி எடுப்பீர்கள்?

(அ) எனக்கு நல்லது என்று பட்டால் உடனே எடுத்துவிடு வேன்.

(ஆ) யோசிக்கும் பொறுப்பை யாரிடமாவது கொடுத்துவிட்டு, அவர் கூறுவதன்படி முடிவெடுப் பேன்.

(இ) அதன் விளைவுகளை நன்கு ஆராய்ந்துவிட்டு, அதற் கேற்பத்தான் முடிவு.

# உன்னை 'டிக்' பண்ணு!



8. ஒருவரிடம் விவாதம் செய்கிறீர்கள். இருவருமே ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுப்பதாகத் தெரியவில்லை. இந்த நிலையில் நீங்கள் எப்படி நடந்துகொள்வீர்கள்?

(அ) 'நீங்க சொல்றதுதான் சரி' என்று விட்டுக்கொடுத்து விடுவேன். எதற்குத் தகராறு?

(ஆ) வேறு 'டாபிக்கு'க்குப் பேச்சை மாற்றிவிடுவேன்.

(இ) தொடர்ந்து நீண்டநேரம் விவாதித்து என் கருத்தை நிலை நாட்ட முயற்சி செய்வேன்.

The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil Weekly newspaper, are published, as called for by rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

## FORM IV

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | : | Chennai |
| 2. Periodicity of Publication | : | Weekly |
| 3. Name of Printer | : | Lakshmi Natarajan |
| Nationality | : | Indian |
| Address | : | Old No. 36, New No.12, 4th Main Road, Kasturba Nagar, Adyar, Chennai - 600 020 |
| 4. Name of Publisher | : | Lakshmi Natarajan |
| Nationality | : | Indian |
| Address | : | Old No. 36, New No.12, 4th Main Road, Kasturba Nagar, Adyar, Chennai - 600 020 |
| 5. Name of Editor | : | Seetha Ravi |
| Nationality | : | Indian |
| Address | : | 'Mangala Ganesh', Second Floor, 15, IV Seaward Road, Valmiki Nagar, Thiruvanmiyur, Chennai - 600 041 |

6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total captial: **Bharathan Publications Private Limited, 47-NP., Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 032.**

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1.3.2010 Lakshmi Natarajan
Publisher

### விடைகள்

| | (அ) | (ஆ) | (இ) |
|---|---|---|---|
| 1. | 0 | 3 | 5 |
| 2. | 5 | 0 | 3 |
| 3. | 3 | 0 | 5 |
| 4. | 3 | 0 | 5 |
| 5. | 3 | 0 | 5 |
| 6. | 0 | 3 | 5 |
| 7. | 3 | 0 | 5 |
| 8. | 3 | 5 | 0 |

உங்களின் மொத்த மதிப்பெண்கள் 30 லிருந்து 40வரை என்றால்,

சோதனையா? ஸோ வாட்? என்று கேட்கிறவர் நீங்கள். பிரச்னைகளைச் சந்திக்கும்போது உணர்ச்சிக்கு மட்டுமே இடம் கொடுக்காமல் நுட்பமாகச் சிந்தித்து சரியான முடிவுகளை எடுக்கக் கூடிய

## சோதனையா? ஸோ வாட்? கம்ஆன் பாஸ்! லைஃப்ட்ல டீல் பண்ணலாம்!



வல்லமை உங்களுக்கு உண்டு. இப்படி அஞ்சாநெஞ்சராக இருப்பதைத் தொடருங்கள்.

உங்கள் மொத்த மதிப்பெண்கள் 15 லிருந்து 29வரை என்றால்,

பிரச்னை, அதனால் பாதிப்பு என்றால் மனம் துவள்வது மனித இயல்புதான். என்றாலும் சுயபச்சாதாபத்தில் தொடர்ந்து மூழ்காமல் வெளிவந்து சோதனையைச் சமாளிக்கவும் தெரிந்திருக்கிறது உங்களுக்கு. இன்னும் கொஞ்சம் தெளிவுடன் பிரச்னைகளை அணுகினால், எளிதாகவே அவற்றைப் புறமுதுகிட்டு ஓடச்செய்ய முடியும். பிரச்னை எனில் ஷெனாயின் சோக இசையை மனத்தில் ஓடவிடாமல், 'துன்பம் நேர்கையில் யாழ் எடுத்து இன்பம் சேர்க்க' முயற்சி செய்கிறீர்கள். அதை மேலும் வலிமையாகச் செய்யுங்கள்.

உங்கள் மொத்த மதிப்பெண்கள் 15க்கும் குறைவு என்றால்,

மிகவும் இளகிய மனம் உங்களுக்கு. ஸாரி, இதை பாராட்டுதலாகச் சொல்லவில்லை. பிரச்னைகள் எதிர்ப்படும்போது கலக்கம், மயக்கம், குழப்பம் என்று மாறி மாறி நச்சு வளையத்தில் சுற்றிக்கொண்டே இருந்தால் பிரச்னை தீராதது மட்டுமல்ல, அதன் தாக்கம் அதிகமாகவும் இருக்கும். உங்களைவிட மிக அதிகமான சோதனைகளைச் சந்தித்தவர்களும் உண்டு. எனவே மனத்தை சட்டெனச் சமாதானப்படுத்திக் கொண்டு சோதனைகளைச் சமாளிக்கும் வழிகளைத் தெளிவாக யோசிக்கப் பழகுங்கள். ●

# சாகசம்

## அருள்வாக்கு



தங்களை நல்வழிக்குக் கொண்டு வர வேண்டும் என்று வாலிபர்கள் விட்டுவிடாமல் தாங்களாகவே நல்வழிப்படுவதுதான் அழகும் கௌரவமும். பெரியவர்கள் இவர்களுக்கு உதாரணம் காட்டு வதற்குப் பதில் இப்போதுள்ள ஸ்திதியில் இவர்களே பெரியவர்களுக்கு உதாரணம் காட்டும்படித் தங்களை உசுப்பி எழுப்பிக்கொண்டால் அதுதான் யௌவன சாகசங்களில் ரொம்பவும் விசேஷமான 'க்ரெடிட'பிளான சாகசமாக இருக்கும்.

'அட்வென்ச்'சருக்குப் பறக்கும் யுவ ஸமூஹத்தில் அங்கங்கே சில பேராவது இந்த 'அட்வென்ச்'சரில் புறப்பட்டு, தங்களுடைய ஸாஹஸ ஸாமர்த்தியத்தால் மற்ற மாணவர்களையும் அந்த 'ஸ்பிரிட்' தொற்றிக் கொள்ளுமாறு செய்ய வேண்டும். இதுதான் என் ஆசை. இதற்காகவே எவரைப் போல் வித்யா ஸ்வீகரணம் செய்த கல்விமான் இல்லையோ, எவரைப்போல் சாகஸம் செய்தவர் இல்லையோ, அதே சமயம் எவரைப் போல் விநய பக்தி உள்ளவரும் இல்லையோ அந்த ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

நடக்கமுடியாத ஒன்று நடக்க வேண்டுமென்று நான் ஆசைப்படுவதாகவும், ப்ரார்த்தனை பண்ணுவதாகவும் தோன்றலாம். வயதானவர்களாலேயே தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக்கொள்ள முடியாமலிருக்கும்போது, காளைப் பருவத்தினிடம் அதை எப்படி எதிர்பார்க்கலாமென்று தோன்றலாம். நான் எல்லா யுவர்களும் அப்படி ஆவார்களென்று ஒருநாளும் எதிர்பார்க்கவில்லை. நூற்றுக்கு ஏழெட்டுப் பேரைத்தான் எதிர்பார்க்கிறேன். நான் சொல்வது விசித்திரமாகத் தோன்றினாலும், வயதானவர்கள்தான் ரொம்ப வருஷம் கட்டுப்பாடு இல்லாத போக்கில் பழகி ஊறிப்போய்விட்டதால், அந்தப் போக்கிலிருந்து மீளுவது முடியாமல் போகிறது. வாலிபர்கள் அப்படியில்லை. மனசு வைத்துவிட்டால், ஒரு பிடிவாதமான சங்கல்ப பலத்தில் மனசுப்படியே சாதித்துக்கொள்கிற சக்தி அவர்களுக்கு உண்டு.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

# மனம் திறந்து...

கேட்டைத் திறந்து கொண்டு வீதியில் இறங்கினேன். மாசி மாதப் பனி படர்ந்திருந்தது. கருக்கல் அழியாத இனிய வைகறைப் பொழுது. நான் வாக்கிங் கிளம்பிவிட்டேன். ஐந்து வயதுச் சிறுமி கலர் கலர் பலூன்களைப் பார்த்துப் பூரிப்பது போல் இந்த இளங்காலை நேரத்து விதவிதமான அழகுகளை ரசிக்கிறேன்...

''ரம்யா... நானும் உன் கூட வர்றேன்...'' என்று கத்திக்கொண்டே பக்கத்து வீட்டு மேரியம்மா வருவார்கள் என்று நான் கனவு கூடக் காணவில்லை. எனக்கே எனக்கென்ற இந்த ரம்மியமான சந்தோஷத்தைக் கெடுக்க வருகிறார்களே!

மூன்று மாதம் முன்பு...

''350 இருக்கும்மா சுகர் லெவல். மயக்கம் போடாம வந்து சேர்ந்தீங்களே... பெரிய விஷயம்தான்...''

எது சாப்பிடலாம்? எது சாப்பிடக் கூடாது? பிறகு மாத்திரை, மருந்து அட்வைஸ். டாக்டர் சொன்னதைக் கேட்டு விட்டு வீட்டில் வந்து கணவரிடம் கத்தினேன். ''உங்களுக்கு ஐம்பது வயசாச்சு ஜாலியா இன்னும் லட்டு, கேசரி, பால் அல்வான்னு முழுங்கறீங்க. எனக்கு நாற்பத்திரண்டு வயசிலேயே இனிப்பே கூடாதாம். என்னங்க நியாயம்?''

''இன்னும் கொஞ்சம் கத்து. பி.பி. கொலஸ்ட்ரால் வரட்டும்.''

''இப்ப உங்களுக்குத்தான் கொலஸ்ட்ரால். ஆறுதல் சொல்லாம இப்படிப் பேச றீங்களே... எனக்கு திரட்டுப்பால் சாப்பிடணும் போல இருக்கு...''

''ஹா ஹா ஹா....'' என்று சிரித்தார்.

''எதுக்கு வில்லன் மாதிரி சிரிக்கறீங்க?''

''போன மாதம் திரட்டுப்பால் செய்து எனக்குத் துளியூண்டு கொடுத்திட்டு, எல்லாம் நீயே முழுங்கினேதானே. அந்தப் பாவம்தான்...''

''போங்க நீங்க... எனக்கு வர்ற கோபத்திலே...''

''ரம்யா, விளையாட்டுக்குச் சொன்னேன். நீ பாரு; நாற்பத்திரண்டு வயசிலேயும் இருபத்தஞ்சு வயசு மாதிரி லட்டாட்டம் இருக்கே. நான் பாரு; ஐம்பது வயதுக்கும் மேலா மதிக்கும்படி. முன் வழுக்கை, நரைன்னு இருக்கேன். எல்லாத்தையும் க்ரேஸ்புல்லா அக்செப்ட் பண்ணிக்கணும். சரி... ஒண்ணு சொல்றேன் கேளு. அதிகாலையிலேயே எழுந்து வாக்கிங் போ. முக்கால் மணி நேரம் போதும். சுகரெல்லாம் காணாமப் போயிடும். அப்பப்ப நைசா கொஞ்சம் ஸ்வீட் சாப்பிட்டுக்கலாம்.''

''நிஜமாவா?''

''ம்... நிஜம்.''

''அப்ப சரி...''

என் சோகத்தின் முடிவில் வாக்கிங் என்ற விடியல் எனக்கு ஆறுதலும் ஆனந்தமும் தந்தது. வீதி பரந்து ஹாவென்று காலியாக இருந்தது. புகையும் சத்தமும் இல்லாத வாகனங்களற்ற வீதி. கொளுத்தும் வெயிலற்ற குளிர்ந்த வானம். வீட்டுத் தோட்டங்களில் மலர்ந்து மணம் வீசுகின்ற பூக்களின் வாசனையை, வஞ்சமில்லாமல் திருடிக்கொண்டு வந்து வீசும் கன்னித் தென்றல். இந்த நிசப்த சங்கீதத்தை ரசித்துக்

கொண்டே வேகவேகமாக நடக்கும் பொழுது மனசு பஞ்சு மாதிரி மிருதுவா கிறது. இப்போ என் தனிமையின் இனி மையில் மண் விழுந்தது. தினமும் கிளம்பும் வேளையில் மேரியம்மா வந்து இணைந்து கொண்டார்.

பேசினார்... பேசினார்... பேசினார்... பேசிக்கொண்டே வந்தார். எல்லாம் புலம்பல்! மகளுக்கு வாய்த்த தப்பான புருஷன் பத்தி... அடி, உதை, குடி. இரண் டாவது பெண்ணின் நாத்தனார் கொடுமை பற்றி... மகன் தங்களைத் துரத்திவிட்டது பற்றி... தனக்கிருக்கும் இதய நோய் பற்றி - என்னால் தாங்கிக் கொள்ள முடிய வில்லை. என் இனிமையான நேரத்தை வீணாக்குவதற்கென்றே அவதாரம் எடுத்து வந்திருக்கிறாரோ? வீட்டில் கணவரிடம் சொன்னேன்.



சங்கரி அப்பன்

சொல்லும்போதே கண்ணில் நீர் கட்டிற்று.

''என்ன இது... என்ஜினியரிங் படிக்கிற இரண்டு பையன்களுக்கு அம்மா மாதிரியா நடந்துக்கற? இதற்கெல்லாம் யாராவது அழுவாங்களா? பயத்தை மாத்து. இல்லை 'டிஸ்டர்ப் பண்ணாதீங்கன்னு' நேரடியா சொல்லிடு. அதை விட்டுட்டு குட்டிப் பாப்பா மாதிரி அழுற அசடு... அசடு...'' அவர் செல்லமாக என் தலையை வருடி விட....

''ம்ம்... அப்ப சரி...'' என்றேன் குஷியாக அகலப் புன்னகையுடன்.

''பேய் கூட படம் எடுக்கறதா? என்ன தலைப்பு?''
''நான் என் இறந்தேன்?''
- சாயம் வெ.ராஜாராமன்



மறுநாள் ஐந்தடித்தது. வாக்கிங் கிளம்பி காலில் செருப்பு மாட்டும் வரை மேரியம்மாவிடம் எப்படிப் பேசி அவர்களை எப்படி அவாய்ட் பண்ணலாம் என்றே சிந்தித்தேன். அப்படிச் சொல்லலாமா? இப்படிச் சொல்லலாமா...? என்று கணவரிடம் நூறு தரம் சொல்லிச் சொல்லி போரடித்து விட்டேன்.

'நல்ல ஐடியாங்க. இப்படிச் சொன்னா என்ன? என் கூட நீங்க வரக்கூடாதுன்னு எங்க வீட்டுக்காரர் சொன்னாருன்னு உங்க மேலே பழியைப் போடறேன். அப்ப தப்பா நினைக்க மாட்டாங்க...'

'எதையாவது எடுத்து அடிக்கறதுக்குள்ளே ஓடிடு' - இது நேற்று சாயங்காலம் நடந்த ரகளை.

''ஐ ஆம் ரெடி...'' வாசலுக்கு வருகிறேன். மேரியம்மா வீட்டில் லைட் எரிகிறது. தடதடவென்று ஆட்டோ வருகிறது. மேரியம்மா சகிதம் கணவர் ஜேம்ஸ், தோள் பையுடன் வெளிவருகிறார். என்னைக் கண்டுவிட்டு வேகவேகமாகப் புன்னகையுடன் வந்தார்கள்.

''ரம்யா என் இரண்டாவது பெண் உண்டாகியிருக்கான்னு சொன்னேன்லே... என்னை வரச்சொல்லி மாப்பிள்ளை ஃபோன் செய்தார். அதான் திருச்சி கிளம்பறேன். பிரசவம் முடியும் வரை வர முடியாது...''

அப்பாடா... திடீரென நூறு பறவைகளின் சிறகுகள் பெற்றுக்கொண்ட மாதிரி ஆகாசத்தில் பறக்கிறேன். என் கணவரிடம் குதூகலமாகச் சொல்வேன்; தானாகவே பிரச்னை தீர்ந்தது என்று!

''கவலைப்படாதீங்க மேரியம்மா. கண்டிப்பா நல்லபடியா குழந்தை பிறக்கும்.''

''தாங்க்ஸ் ரம்யா...'' என்றபோதே அவர் கண்களில் மகிழ்ச்சி தெரிந்தது.

''இதுக்குப் போய் தாங்க்ஸ் எல்லாம் சொல்லிக்கிட்டு. என்ன மேரியம்மா நீங்க?''

''தாங்க்ஸ் அதுக்கில்ல ரம்யா. உன் கூட வந்த இந்த ஒரு வாரம் என் மனசு ரொம்ப லேசாச்சு. நீ ரொம்ப நல்ல பொண்ணும்மா. எவ்வளவு அக்கறையா பரிவோடு என் வருத்தமெல்லாம் கேட்டு ஆறுதல் சொன்னே! உன்னை மாதிரி பெண்ணைப் பார்க்கறது அபூர்வம் ரம்யா. அதுக்குத்தான்

தாங்க்ஸ்... வரட்டுமா? உன்னை மறக்கவே மாட்டேன். என் மக கூட அங்கேயே செட்டில் ஆனாலும் ஆயிடுவேன்..பை''

சட்டென்று என் கன்னத்தில் முத்தமிட்டார் மேரியம்மா.

''தாங்க்ஸ் எ லாட் ஃபார் யுவர் கைண்ட்னெஸ். கர்த்தர் உன்னை ஆசீர்வதிப்பார்.''

ஆட்டோவில் ஏறிப் புறப்பட்டார். கண்ணீர் கன்னங்களில் உருள திரும்ப வீட்டுக்குள் ஓடினேன் நான். தூங்கும் கணவரை எழுப்பி நடந்ததைச் சொல்லி அழுதேன். பரக்க பரக்க எழுந்து உட்கார்ந்தவர்... நான் சொல்வதைக் கிரகிக்கச் சிறிது நேரமாயிற்று. நல்லவேளை கோபிக்காமல் சொன்னார்.

''பொறந்த வீட்டிலே அன்பென்னும் தங்க ஊஞ்சல்லே உன்னைத் தாலாட்டி வாங்க. புகுந்த வீட்டிலே வைரத் தட்டிலே வைச்சுத் தாங்கினாங்க. அன்பான கணவர், இரண்டு பிள்ளைகள், வசதியான வாழ்க்கை... உனக்கு மேரியம்மா மாதிரி உள்ளவங்களோட வலியும் வேதனையும் எப்படிப் புரியும்? ஆனா அவங்களைக் காயப்படுத்தக்கூடாதுன்னு இதமா பேசினியே. அதனாலே நீ இந்தப் பாராட்டுக்குத் தகுதியுடையவதான்...''

''இல்லே. மனசாலே அவங்களுக்கு நான் ஆறுதல் சொல்லலை. அதனாலதான் எனக்கு மனசு இப்ப வலிக்குதுங்க.''

''அவங்களுக்கு நல்லது நடக்கும்னு மனசாரத்தானே சொன்னே... அப்புறம் என்ன...? அடுத்தவங்க கஷ்டத்தைப் புலம்பல்னு ஒதுக்காதே. அது உனக்கு வந்தால் எப்படியிருக்கும் என்று யோசி... இது ஒரு அனுபவம். இதில் உள்ள பாடத்தைக் கத்துக்க... இப்ப தூங்க விடறியா?''

''ஓ.. ஸாரிங்க...''

பலபலவென்று விடிந்தது பொழுது. சூரியக் கதிர்கள் ஜன்னல் வழியே நுழைந்தன. வெளிச்சம் பரவியிருந்தது என் இதயத்திலும்!


BLB
PLEDGED TO ETHICS

தாம்பரம் - செங்கல்பட்டு
நெடுஞ்சாலையில்
3 முத்தான மனைகள்



புதிய குடியிருப்புகள், தொழிற்சாலைகள் என வேகமாக வளர்ச்சியடைந்து வரும் தாம்பரம் - செங்கல்பட்டு தேசிய நெடுஞ்சாலையில் BLB வழங்கும் 3 வீட்டுமனைப் பிரிவுகள். குறைந்த முதலீடு, நிறைந்த லாபம் பெற இன்றே முதலீடு செய்யுங்கள்.

GST Road

ஸ்ரீ நால்வர் நகர்
அச்சரப்பாக்கம்

ஸ்ரீ பாண்டுரங்கா நகர்
மேல்மருவத்தூர்

ஸ்ரீ ஹயக்ரீவா நகர்
மஹிந்திரா சிட்டி அருகில்

தேர்ந்தெடுக்க பல்வேறு விலைகளில்

5 வருட மனைப் பாதுகாப்பு சேவை.

சுந்தரம் ஹோம் பைனான்ஸ் மற்றும் IDBI ஹோம் பைனான்ஸ் வாயிலாக கடன் வசதி உண்டு

2834 5104 (4 lines)

BLB ESTATES (P) LTD
Website: www.blbestates.com
INVESTING IN VALUES

## மேஷம்:

மன நிறைவு தரும் வாரம். கஷ்டங்களிலிருந்து விடுபடுவீர்கள். உடல் ஆரோக்யம் கூடும். கடன் சுமை தீரும். குடும்பத்தில் குதூகலம் பெருகும்.

## ரிஷபம்:

கட்டுப்பாடுகள் தளரும். எனினும் உடல் நலனில் கவனம் தேவை. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையுடன் இருத்தல் நல்லது. வீட்டிலும், வெளியிலும் வாக்குவாதத்தைத் தவிர்க்கவும்.

## மிதுனம்:

தூர தேச அழைப்பு கிட்டும். பொருளாதார நிலை மேம்படும். சுப காரியங்கள் கைகூடும். மன அமைதி கூடும்.

## கடகம்:

கல்வியின் பொருட்டு வெளியூர்ப் பயணம் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் அடங்கும். குடும்பத்தில் அமைதி நிலவும். தீராத பிரச்னைகள் தீரும்.

## சிம்மம்:

திடீர் தனயோகம் கிட்டும். பூமி விஷயத்தில் யோகம் கிடைக்கும். கடன் பிரச்னைகள் முடிவுக்கு வரும். வராத நிலுவைகள் வந்து சேரும். வழக்குகள் வெற்றி பெறும்.

## கன்னி:

மறைமுக எதிர்ப்புகள் அதிகரிக்கும். உடல்நலத்தில் கவனம் தேவைப்படும். வீடு மாற்றம் ஏற்படும். பணப்பற்றாக் குறையும் ஆரோக்கியப் பாதிப்பும் உண்டு.

## துலாம்:

எண்ணங்கள் ஈடேறும். சொத்து சேர்க்கை ஏற்படும். உறவினர் வருகை உண்டு. கடன் தொல்லைகள் மறையும். குடும்பத்தில் மகிழ்ச்சி கூடும்.

## விருச்சிகம்:

எதிலும் நிதானத்துடன் செயல்பட வேண்டும். மன உளைச்சல் ஏற்படும். யாரையும் நம்பி ஜாமீன் போடுவதைத் தவிர்க்க வேண்டும். வியாபாரத்தில் மந்த நிலை உண்டாகும்.

## தனுசு:

பண வரவு கூடும். வழக்கு, வியாபாரம் வெற்றி முகம் காணும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். பணியில் உயர்வு கிடைக்கும். மனநிம்மதி பெருகும்.

## மகரம்:

நீண்ட தூரப் பிரயாணம் செல்ல நேரிடும். சுபச் செலவுகள் ஏற்படும். எதிர்ப்புகள் விலகும். சொந்த வீடு அமையும் யோகமும் உண்டு.

## கும்பம்:

பூர்விகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். திடீர்ப் பயணம் உண்டு. வேலையில் இடமாற்றம் ஏற்படும். பணப் பிரச்னைகள் முடிவுக்கு வரும்.

## மீனம்:

கடன் தொல்லைகள் விலகும். வீடு வாங்கும் யோகம் கிட்டும். நண்பர்களால் நன்மை ஏற்படும். புதிய தொழில் அமையும். உத்தியோகத்தில் இட மாற்றம் உண்டு. குடும்பத்தில் அமைதி நிலவும். ○



# நடக்குமென்பார்; நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்

28.02.10 முதல்
06.03.10 வரை

"ஏனுங்க... சௌக்கியமுங்களா..?" - கொங்கு தமிழில் பொங்கும் பாசத்தோடு கல்கி ஜாலி விசிட் டீமை வரவேற்றனர் ஸ்டூடன்ட்ஸ். இடம் அவினாசி நெடுஞ்சாலையிலுள்ள டாக்டர் என்.ஜி.பி. கலை மற்றும் அறிவியல் கல்லூரி. கோயம்புத்தூர் விமான நிலையத்துக்கு, மிக அருகே உள்ள கல்லூரி வளாகத்துக்குள் பறந்து கொண்டிருந்த பட்டாம்பூச்சிகளைப் பார்த்ததும், ''வணக்கமுங்க... வந்துட்டோமுங்க'' என்று கலகலப்பாகக் கச்சேரியைத் தொடங்கினோம்.





# வந்துட்டோமுங்க... வந்துட்டோம்!





* கல்லூரிப் பாடகி...

நட்சத்திரங்களை நானும்
தினம் தினம் எண்ணுவேன்;
அவை என்னைப் பற்றி
என்னதான் எண்ணினாலும்!

- க.கஜந்தினி





இயல், இசை, நாடகம் - எல்லா தமிழ்லயும் எங்க ஸ்டூடன்ட்ஸ் இறங்கி விளையாடுவாங்க.

- இரா.செங்கமுத்து,
தமிழ்த்துறைத் தலைவர்





மக்களால் மக்களுக்காக
நடத்தப்படுகிறது
குடியாட்சியும்
'குடி'யின் ஆட்சியும்

- எம்.வேல்முருகன்

ரயில் எவ்வளவுதான்
ஸ்பீடா போனாலும்
கடைசி பெட்டி
கடைசியிலதான்
வரும்!

- ரஞ்சிதா










# யாரால வளருது இந்தியா?

**பெரியவங்களே!**

- இளைஞர்கள் பூஜ்யங்களைப் போல. பெரியவர்களால்தான் அவர்களுக்கு மதிப்பு கூடுகிறது.
- காலத்தை வென்ற தமிழ் இலக்கியங்களைப் படைத்தது எல்லாம் எங்க பெரிசுகளே. எந்த சிறிசும் ஒண்ணும் சாதிக்கல.
- இந்த நாட்டையே பெரியவங்கதான் வழிநடத்த வேண்டியிருக்கு - அது மாநிலமா இருந்தாலும், மத்திய அரசா இருந்தாலும்!

**இல்ல... இல்ல சின்னவங்கதான்**

- கூட்டுக் குடும்பம் சிதைஞ்சதே பெரியவங்க செய்கிற முட்டுக்கட்டை செயல்களாலதான்.
- பாராளுமன்றமே முதியோர் இல்லமாகத்தான் இருக்கு. அதனாலதான் இந்தியா மெதுவாக முன்னேறுது.
- எல்லையில் சண்டையா? ஏ.ஆர். ரஹ்மானுக்கு விருதா? எல்லாம் நாங்கதான்.

"இளைஞர்களின் வேகத்தைப் பயன்படுத்தி முதியவர்கள் விவேகமாகச் செயல்பட்டால்தான் முன்னேற முடியும். தோணி முதியவர்கள்; துடுப்பு இளைஞர்கள். அம்புட்டுதான் என் தீர்ப்பு."

**- நடுவராக... பேராசிரியர் மணிகண்டன்**

## ஒண்ணு தெரியுமா?

**ஓ.டி. புவனேஸ்வரன், முதன்மை செயல் அலுவலர்:**



"இன்னமும் வழிபாட்டுக் கூட்டம் நடத்துறோம். செய்தித்தான் கட்டாயமாக வாசிக்க வெக்கிறோம். ஒண்ணு தெரியுமா? கல்லூரி மாணவர்கள் வெள்ளிக் கிழமை மட்டும் யூனிபார்ம்ல வரணும். ஏன்... அப்பப்போ அவங்க நம்ம ஒழுங்குல, கட்டுப்பாட்டுல இருக்காங்களான்னு உறுதி செஞ்சுக்கத்தான்."

**நான் காலேஜ் அழகிங்க!**





களத்தில் இறங்கிட்டா
கப் வாங்காம
கரையேற மாட்டோம்!




என் கெட்டப்பைப் பார்த்துட்டு 'எந்திரன்'ல நடிக்கக் கூப்பிட்டாங்க... 'ரோபோ'வுக்கு 'டூப்' போடச் சொல்வாங்களோன்னு பயந்து வேண்டாம்னு சொல்லிட்டேன்.

## ஃபீலிங்ஸ் மச்சி!

காதல் விநோதமான எக்ஸாம். அது எப்போதும் தேவதைகளுக்கு பாஸ் மார்க்கும் தேவதாஸ்களுக்கு டாஸ்மாக்கும் தரும்.





**டாக்டர் பெ.ரா.முத்துசாமி (முதல்வர்) :**

"கல்வியும் கட்டுப்பாடும் என்.ஜி.பி கல்லூரியின் இரு கண்கள். ஜர்னல் க்ளப் (Journal club) என்ற அமைப்பின் மூலம் உலகளாவிய கட்டுரைகள் குறித்து வாசிக்க, சமர்ப்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். எந்துஸ்தா கிளப் (Enthustha Club) மூலம் நூல்களை விமர்சிக்கவும், 'தமிழோசை' இதழ் மூலம் இலக்கிய வெளிப்பாட்டைக் கொண்டு வரவும் பயிற்சியளிக்கிறோம். வேலை வாய்ப்பு தொடர்பான விஷயங்களுக்கு இ.லேர்னிங் (E.learning) என்ற மையம் தொடங்கி பயிற்சி முகாம்கள் நடத்துகிறோம்.

# இங்கே படிச்சவங்களுக்கு இங்கேயே வேலை!

***டாக்டர். தவமணி தேவி பழனிசாமி (செயலர்)***

*1997-ல் 45 மாணவர்களுடன் தொடங்கப்பட்ட இந்த டாக்டர் என்.ஜி.பி காலேஜில் இப்போது 2500 மாணவர்கள் பயில்கின்றனர். எந்த மாணவனும் வசதியில்லாததால் படிக்க முடியவில்லை என்பதை நாங்கள் ஏற்பதில்லை. ஏதாவது ஒரு பகுதி நேர வேலை வாய்ப்பை உருவாக்கிக் கொடுத்து, சம்பாதிக்க வைத்து, படிப்புக்கான ஊதியத்தைப் பெற வைக்கிறோம். மருத்துவ நிர்வாகம், மருத்துவப் பரிசோதனைகளைக் கையாளுதல் போன்ற படிப்புக்களை முதன்முதலாகக் கொண்டு வந்திருக்கிறோம். இங்கு படித்தவர்கள் விரும்பினால், இங்கேயே பணிபுரிய வாய்ப்பும் தருகிறோம்.*





***டாக்டர் நல்லா.ஜி பழனிசாமி (தலைவர்), கோவை மருத்துவ மைய ஆராய்ச்சி கல்வி அறக்கட்டளை)***

"மாணவர்களின் மனநிலைகளைப் புரிந்து, பிரச்னைகளைச் சரிசெய்ய, தலைசிறந்த மனநல மருத்துவர்களின் ஆலோசனைகள் அளிக்கப்படுகின்றன. ஆங்கில அறிவை மேம்படுத்த மொழியியல் ஆய்வுக் கூடம் செயல்படுகிறது. தேவையில்லாமல் புத்தகத்தைத் தேடி நேரத்தை வீணடிக்காமலிருக்க Opace online Public Access Catalog முறை செயல்படுகிறது. கூடுமானவரை பண்பாட்டுச் சீரழிவு இன்றி இந்தியரின் முதுகெலும்பாயிருக்கும் தமிழ் கிராமங்களின் மாணவர்களை மேம்படுத்துவதே எமது கடன்...

**- ஆர்.பாலா**

# அங்கத அடி!










**கண்ணோட்டம் - முனைவர் ஜி.ஜெயராமன், விலை ரூ. 40.00**

பலரும் அறிந்த கதைகளை, புதிய கோணத்தில் பிரமாதப் படுத்தியிருக்கிறார் ஆசிரியர். சிறு வயதிலேயே பார்வையையும், பின்பொரு விபத்தில் காலையும் இழந்தவர். துணிவையும், முயற்சியையும் இழக்கவில்லை. பல்வேறு முதுகலைப் பட்டங் களும், முனைவர் பட்டமும் பெற்ற இவரது விடாமுயற்சிக் கும், ஆர்வத்துக்கும் இந்த அறி முகம் போதும். இவர் படைத் துள்ள 'கண்ணோட்டம்' அபார மானது. உதாரணமாய் ஒற்றை நெல்லை விதைக்கக் கூப்பிடும் கோழி கதை! பழமையான இந்தக் கதைக்கு, தற்கால நிகழ் வைப் பூசி மனத்தைக் கனக்கச் செய்கிறார். பன்னிரண்டு கதை கள், படிக்கும்போதே பலமான அங்கத அடி விழுகிறது மனத் தில்!

**கடவுளும், குழந்தையும்- இ.வெங்கடேசன், விலை ரூ.40.00**

பார்ப்பது என்றால் கண் வழியே மனம் பார்க்கிறது என்று தான் பொருள். பார்வையற்ற ஒரு வரின் பார்வை எப்படியிருக்கும்? அதை நெஞ்சில் தைக்கும்வித மாக வெளிப்படுத்தியிருக்கிறார் இ.வெங்கடேசன். பதினேழு சிறு கதைகள். உணர்ச்சியும், அறிவும் ஒருகணம் உறையும்படியான அதிர்வு ஏற்படுகிறது வாசிக்கை யில். தமிழில் முதுகலைப் பட் டம் பெற்ற இவர், வாணியம் பாடி நகராட்சி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியர். கதை களைப் படித்துவிட்டு இவர் பற் றிய குறிப்புகளைப் படித்தால், 'இவர் பார்வையற்றவரா?' என்று திகைப்பு ஏற்படு வது நிஜம்.

**சமுதாயத்தில் நாம் - கே.ரகுராமன், விலை ரூ.25.00**

கட்டுரை, கதையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட வடிவம். அதை லாகவமாகக் கையாண்டுள்ளார் ரகு ராமன். ஆங்கில இலக்கியத்தில் முதுகலைப் பட்டம் பெற்ற இவர், பார்வையிழந்தவர். திருவல்லிக்கேணி லேடி வெலிங்டன் பள்ளியில் பணியாற்றுகிறார். எம்.ஃபில் படித்து வருகிறார். இவர் எழுதியுள்ள பன் னிரண்டு கட்டுரைகளின் தொகுப்பு இந்நூல். ஆங்காங்கே பளிச்சென்று சவுக்காய் சொடுக்குகின்றன வார்த்தைகள்: 'நமக்குப் பணத்தின் மீது இருக்கும் கவனத்தை விட, சமுதாயத்தின் மீது உள்ள அக்கறையும், கவனமும் மிக வும் குறைவே!' - மறுக்கத்தான் முடியாது.

**மூன்று புத்தகங்களையும் வெளியிட்டோர்: Welfare Foundation of the Blind, எண் 17, ஈஸ்வரன் கோவில் தெரு, கிளம்பாக்கம், ஊரப்பாக்கம் - 603 202.**

**- ராகவன்**

# ஜாலியா போராடணும்!



* கீதா பிரேம்குமார்

''அறுவை சிகிச்சையில் குழந்தை பிறந்து பதினைந்து நாட்களே ஆன நான், அந்த வலியோடு, வீட்டு வேலைகளை முடித்துவிட்டு, குழந்தையை சிட்கோ அலுவலத்தின் மரத்தடியில் உள்ள பெண்மணியிடம் கொடுத்துவிட்டு, ஒருநாள் முழுக்க ஆண்களோடு கியூவில் நிற்பேன். இப்படி பதினைந்து நாள் போராடிதான் சிட்கோ அலாட்மெண்ட் அப்ளிகேஷனையே வாங்கினேன்'' - என்று சொல்லும் டாக்டர் கீதா பிரேம்குமார் தற்போது 'விக்டர் இன்டோஜெனிக் பிரைவேட் லிமிடெட் நிறுவனத்தின் இயக்குநர்/ தொழிலதிபராக இன்று விஸ்வரூபம் எடுத்திருக்கும் இவரின் வெற்றிக்கான சூட்சுமங்களைக் கேட்டபோது...

''நிறைமாத கர்ப்பிணியாக இருந்தபோது இந்தியன் வங்கியில் அலைந்து போராடி ஐம்பதாயிரம் ரூபாய் கடன் வாங்கினேன். இப்போது தொழில் தொடங்கி இருபது வருடங்களாகின்றன. வருடத்துக்கு மூணு கோடி பிஸினஸ் பண்றேன். என்னோட தொழிலுக்கு ISO தர முத்திரை கிடைத்திருக்கிறது.

இத்தனைக்கும் நான் வசதியான குடும்பப் பின்புலம் உள்ளவள் அல்ல. முதலில் சாதாரண டீச்சராக வேலை பார்த்தேன். பிறகு என் இலக்கு இது வல்ல என்று உணர்ந்து, அந்த வேலையை விட்டுவிட்டு கம்ப்யூட்டர் துறையில் நுழைந்து, 'மார்க்கெட்டிங் பிரிவில் வேலை செய்தேன். பிறகு மின்னணு சாதனங்களான யு.பி.எஸ், ஸ்டெபிலைசர், இன்வெர்ட்டர் போன்றவற்றைத் தயாரிக்கும் நுட்பம் அறிந்தேன். இன்று நானும் அவற்றை உற்பத்தி செய்யும் ஒரு வெற்றிப் பெண்மணி'' என்கிறார்.

**''ஆணாதிக்கமிகுந்த உலகில் குடும்பப் பெண்மணியான நீங்கள் தொழில் முறை சவால்களை எப்படி எதிர்கொள்கிறீர்கள்?''**

''ஒப்பந்தங்கள் பெரும்பாலும், ஆறு



## காம்ப்ளான் கதை

★ தொழிற்சாலையில்...

கீதா பிரேம்குமார், தொழிலில் புதுப்புது மாற்றங்களை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டே இருப்பதற்காகவே தொடர்ந்து பயணம் செய்கிறார். இதுவரை ஒன்பது நாடுகளைச் சுற்றி வந்திருக்கிறார். தொழில் முனைவோர்க்குப் பயிற்சி முகாம் மற்றும் ஆலோசனைகள் வழங்குவதை விருப்பத்துடன் செய்யும் இவரிடம், எந்தப் பெண்மணியும் தொழில் தொடங்குவதற்கான ஆலோசனையை உதவியாகப் பெறலாம்.

மணிக்கு மேல், ஒட்டலில் பார்களில் நடப்பது சாதாரணம். அச்சமயங்களில் சரியான படி என் நிலைமையை எடுத்துக்கூறி அச்சூழலை நிராகரித்து விடுவேன். கலாசார சீரழிவைச் சகித்து ஏற்றுக்கொண்டு அடையும் வெற்றி அருவருப்பானது.

படு கவர்ச்சியாக நமீதாவை அட்டையில் போட்டு வியாபாரம் செய்ய விரும்பாத 'கல்கி'யைப் போன்றது எனது தொழிலின் கொள்கைப் போராட்டம்.

அதேபோல் சம்பாதிக்கும் பணத்துக்கும் நேர்மைக்கும் தொடர்பு உண்டு என்று நம்புகிறவள். அதனால்தான் 15 வருடமாக வாடிக்கையாளர்களைத் தக்கவைத்துக் கொண்டிருக்கிறேன். என் கம்பெனியில் பணி செய்ய ஆரம்பத்தில் களிமண் போல வருவார்கள். எல்லா நுணுக்கங்களையும் கற்றுக் கொடுப்பேன். சிறந்த கலைப்பொருளாக மாறும் தருணத்தில் சொல்லாமல் கொள்ளாமல் வேலையைவிட்டு ஓடி விடுவார்கள். இப்படி என்னிடம் பயின்றவர்கள் பத்து பேர் இன்று தொழில் அதிபர்களாக இருக்கிறார்கள். மீண்டும் புதியவர்களைச் சேர்த்து 'அ'விலிருந்து தொடங்குவேன். இது ஒரு ஜாலியான போராட்டம்,'' என்கிற

**"கலாசார சீரழிவைச் சகித்துக்கொண்டு அடையும் வெற்றி அருவருப்பானது."**

**''தொழில் தொடங்க முதலில் தெரிந்து கொள்ள வேண்டியவை என்ன?''**

''உனது நிலை என்ன என்பதுதான் முதல்ல தெரியணும்... சமைப்பது விருப்பமான காரியம் - இது முதல் நிலை. அதுல இனிப்பை சூப்பரா செய்வது - இரண்டாம் நிலை. ஒரு நிகழ்ச்சியில் இருபத்தைந்து பேர் வந்திருந்து நீ செய்த இனிப்புக்குப் பாராட்டு கிடைப்பது உன் தனித்திறமைக்கான அங்கீகாரம் - இது மூன்றாம் நிலை. அந்த இருபத்தைந்து பேரில் ஒருவர் வீட்டு விசேஷத்துக்கு உன் இனிப்பைச் செய்யும் ஆர்டரைப் பெறுவதுதான் சராசரியிலிருந்து தொழில் தொடங்குவதற்கான புள்ளியை நோக்கி நகரும் நான்காம் நிலை'' என்று விளக்கும் கீதா பிரேம்குமார்... முட்களிடமிருந்து ரோஜா பறிக்கும் வித்தையை மட்டுமின்றி, பறித்த ரோஜாவிடமிருந்து குல்கந்து தயாரிக்கும் சூட்சுமத்தையும் சமூகத்துக்குக் கற்றுத்தரும் வெற்றித் தாரகைதான்!

செய்தி, சித்திரம்: **அமிர்தா**



# பப்ளிக் எக்ஸாம்

''தன்னைப் போல் சினிமா ஃபீல்ட்ல போராடாம, நான் படிச்சு பெரிய ஆளா வரணும்ங்கிறதுதான் என் அப்பாவோட ஆசை. ஒருநாள் வீட்டுல அவருக்குத் தெரியாம அவரோட ட்ரம்ஸை வாசிச்சுக்கிட்டு இருந்தேன். அப்பா வந்துட்டார். சரி... என் முதுகுல ட்ரம்ஸ் வாசிக்கப் போறார்னு நினைச்சேன். ஆனா என் முதுகுல தட்டிக் கொடுத்துட்டு இனிமேல் இசைதான் உனக்கு எல்லாமே என்று சொன்னார்'' - தடதடவென்று ஹைபிட்டில் அவருடைய ட்ரம்ஸ் அதிர்வது போலவே பேசுகிறார் சிவமணி.

அவர் வாசிக்கும் 'அப்பா' புராணத்தின் ஹீரோ எஸ்.எம். ஆனந்தன். இவர் கே.வி. மகாதேவன் குரூப்பில் ட்ரம்ஸ் ஆர்ட்டிஸ்ட்டாக இருந்தவர்.

''அப்பா கொடுத்த நம்பிக்கைதான் என் தன்னம்பிக்கைக்கு அரிச்சுவடி. ஸ்கூலுக்குப் போகாம அப்பாவோட சேர்ந்து கச்சேரிகளுக்குப் போவேன். எனக்கு பத்தாவது வகுப்பு பப்ளிக் எக்ஸாம் நடந்தபோது, ஏ.எம்.ராஜா - ஜிக்கி கச்சேரியில் ட்ரம்ஸ் வாசிச்சிக்கிட்டு இருந்தேன்'' - புன்னகைக்கிறார்.

''ஸ்டுடியோக்களுக்கும் அப்பாவோட போவேன். சிலர் 'அப்பாவும் புள்ளையும் வந்துட்டாங்க'ன்னு நக்கலா பேசுவாங்க. அதே சமயம் என்னைத் தட்டிக் கொடுத்து வளர்த்தவங்களும் இருக்காங்க. எஸ்.பி.பி. கச்சேரின்னா அதில் பதினைஞ்சு நிமிஷம் தனியாவர்த்தனம் செய்ய எனக்கு சான்ஸ் தருவார்.

1984-ல் மும்பையில் ஜாகிர்ஹுசைன், கச்சேரியில் அவர் தபேலாவோடு என் ட்ரம்

ஸூம் சேர்ந்து ஒலிக்க வாய்ப்பு கொடுத்தார். அது மட்டுமில்லாம உலகின் மிகப் பெரிய ட்ரம்ஸ் வித்வான்களிடம் என்னை அறிமுகப்படுத்தி அவங்களோட சேர்ந்தும் என்னை வாசிக்க வைத்தார்.

எனக்குக் கிடைச்ச பாஸிட்டிவ், நெகட்டிவ் அனுபவங்கள் எல்லாமே என்னை மோல்ட் செய்ய உதவின. நெகட்டிவ்வை ப்ரிண்ட் போட்டாதானே பவிச் ஃபோட்டோ கிடைக்குது. இல்ல பாஸ்?'' - நம்மையே கேட்கிறார் இந்த மொட்டை பாஸ்!

ட்ரம்ஸில் பல

## கச்சேரி!

புதிய முயற்சிகளைக் கையாண்டு வருகிறார்.

''அடிப்படையில் கர்நாடக இசை கற்றுக் கொள்ளவில்லை நான். கே.வி. மகாதேவன் குழுவில் மிருதங்க வித்வான்கள் வாசிப்பதை உன்னிப்பாகக் கவனித்திருக்



## வெற்றிக்கு புறச்சூழல் ஒரு பொருட்டல்ல

கிறேன். மிருதங்கத்தில் உள்ள 'சர்வலகு' என்ற அம்சத்தை ட்ரம்ஸில் கையாண்டிருக்கிறேன்.

திருவையாறு நிகழ்ச்சியில் ட்ரம்ஸ் வாசிக்கக் கிடைத்த வாய்ப்பு பொக்கிஷம். வரும் சிவராத்திரியன்று திருவண்ணாமலையின் உச்சி மலையில் நின்று டிரம்ஸ் வாசிக்க வேண்டும். இதுதான் இப்போது என் சமீபத்திய இலக்கு'' என்கிறார்.

உங்கள் முயற்சிக்கும் வளர்ச்சிக்கும் சூழல் தடையாக இருந்ததா?

''நான் வடசென்னை 'மிண்ட்' பகுதியைச் சேர்ந்தவன். புளியந்தோப்பிலும், வண்ணாரப்பேட்டையிலும் மாட்டு வண்டியின் மீது அமர்ந்துதான் ஆரம்ப காலக் கச்சேரிகளைச் செய்திருக்கிறேன். உலகம் முழுவதும் எனது இசை சென்றடைவதற்கு அடிப்படை இந்த மாட்டுவண்டிக் கச்சேரிகள்தான்! தன்னம்பிக்கையும், சரியான வழிகாட்டுதலும் இருந்தால் வாழும் புறச்சூழல் வெற்றிக்குப் பொருட்டல்ல'' வெற்றி ஃபார்முலாவை டெம்பாவோடு சொல்கிறார். மீண்டும் அதிர்கிறது ட்ரம்ஸ் பீட்.

- ராகவ்குமார்

● எம்.ராஜன், மதுரை - 10

? அமோகமான விற்பனையில் இருந்த லாட்டரியை ஒரேயடியாக ஒழித்தது போல, சினிமாவையும் ஒழித்து விட்டால்...?

! கேளிக்கையைப் பொறுப்போடு வழங்கவும் பயன்படுத்தவும் பழகிக்கணும். சினிமா தயாரிப்பையே சிலர் சூதாட்டமாக்கிட்டாங்க என்கிறதாலே ஒரு நல்ல கலைக்கு முற்றுப்புள்ளி வைச்சுடக் கூடாதுங்க! அது சாத்தியமும் இல்லை.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? கோடை கடுமையாகும் முன்னரே மின்வெட்டுக் கொடுமை தொடங்கி விட்டதைக் கவனித்தீர்களா?... மின் உற்பத்தியைப் பெருக்க தமிழக அரசு உருப்படியாக ஏதாவது செய்திருக்கிறதா?

! தடையின்றி இலவச டி.வியைப் பார்ப்பதற்காக எல்லா குடும்ப அட்டைகளுக்கும் இலவச யூ.பி.எஸ். வழங்க உருப்படியான திட்டம் வகுத்து வருகிறார்கள் என்று கேள்வி!

● டி.முருகேசன், திருவாரூர்

? ''கொள்முதல் விலையை உயர்த்தா விட்டால் கரும்பு சாகுபடியே தமிழ் நாட்டில் இல்லாமல் போய்விடும்'' என்கிறாரே ஜெயலலிதா?

! எதிர்க்கட்சிக்கு, எதிர்ப்பதே முதல் பணி என்கிற முறையில், கலைஞரின் முடிவுகள் எல்லாவற்றையும், எப்போதும் ஜெ.எதிர்ப்பார். ஆண்டுதோறும் கரும்பு கொள்முதல் விலையை உயர்த்துவது என்பது அரசு சுலபமாகச் செய்யக்கூடியது தான். ஆனால், அதற்கான மானியங்களை, வரி செலுத்தும் மக்கள்தான் கொடுக்கிறார்கள். சர்க்கரை விலை உயர்வாலும் மக்கள்தான் அவதிப்படுகிறார்கள். பிரச்னைக்குத் தீர்வு, கரும்பு - சர்க்கரை உற்பத்திச் செலவுகளைக் குறைப்பதில் இருக்கிறது. விவசாய - தொழில் - பொருளாதார நிபுணர்களை அழைத்துப் பேசினால் பெருமளவு பயன்கிட்டும்.

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

? ''தமிழகத்துக்குப் பயன்தரக்கூடிய



# சினிமாவை

* கசக்கும் உண்மைகள்!



* அபாய ஆவேசம்!



சேதுசமுத்திரத் திட்டத்தை நிறைவேற்றும் முயற்சியில், தேவைப்பட்டால் போர்க் குணத்தைக் காட்டுவோம்'' என்கிறாரே முதல்வர்?

! விஷயம் நீதிமன்றத்தில் இருக்கிறது. இந்நிலையில் பிடிவாதம், போர்க்குணம் என்பதெல்லாம் நீதிமன்ற அவமதிப்பாகக் கருதப்பட வாய்ப்பு உண்டு. போர்க்குணத் தைக் காட்டிலும் நிதானமும் விவேகமும் பயன்தரும்.

● என்.சித்தாலட்சுமி, சென்னை - 40

? டாஸ்மாக் கடைகளை அழகு படுத்தி, வெளிநாட்டு மதுவகைகளையும் விற்க ஏற்பாடுகள் நடப்பது எதில் முடியும்?

! சமூகத்தை அசிங்கப்படுத்தி, குடிப் போரை ஓட்டாண்டி - நோயாளிகளாக்கி, குடும்பங்களைத் துயரத்தில் ஆழ்த்துவதில் போய் முடியும்!

● என்.பாலசுப்பிரமணியன், சென்னை - 40 *

? ஆம்புலன்ஸுக்கு வழிவிட கமிஷனர் அறிவுரை விடுத்துள்ளது பற்றி...?

! இதற்கு அறிவுரையும் பிரசாரமும் தேவைப்படுகின்றன என்பதே நம் சமூகத் துக்குத் தலைகுனிவு. சாலை விதிகளைப் பெரும்பாலானோர் முறையாகக் கடைப்பிடிக்காததனால்தான் ஆம்பு லன்ஸுகளுக்கு அவசரப் பாதை கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது. வாகனங்கள் அனைத்தும் தாறுமாறாகச் சென்று கொண்டிருப்பதால், விரைவில் ஒதுங்கி வழி ஏற்படுத்துவது இயலாத காரியமாக இருக்கிறது.

● வீ.உதயக்குமாரன், வீரன்வயல்

? அஜித் விவகாரம்...?

! முதல்வருக்கான பாராட்டு விழா மேடையில் ஏறிய பிறகு, தாம் வற்புறுத் தப்படுவதாக பகிரங்கமாகப் பேச அஜித் அஞ்சவில்லை என்பது பாராட்டுக்குரி யதே. அதனை ஆமோதித்து ரஜினி எழுந்து நின்று கரவொலி எழுப்பியதும் போற்று தலுக்குரியதே. ஆனால், 'இப்படி வற்புறுத் தலுக்கு யாரையும் உள்ளாக்கக் கூடாது'



# ஒழித்தால் என்ன?

என்று முதல்வரோ அல்லது திரை உலகப் பெரும்புள்ளிகளோ ஓங்கிக் குரல் கொடுக்காமல் ஒதுங்குவதுதான் கண்டனத்துக்குரியது.

● கே.கணபதி, சென்னை - 11

*? பா.ஜ.கவில் ஒற்றுமை இல்லை என ஆதரவாளர்களும் தொண்டர்களும் நினைத்ததே தங்கள் கட்சி லோக் சபா தேர்தலில் தோற்கக் காரணம் என்கிறாரே அத்வானி?*

! நினைப்பதாவது...? அவர்கள் ஏதோ இல்லாததையும் பொல்லாததையும் கற்பித்துக் கொண்டா நினைத்தார்கள்? ''பா.ஜ.க.வின் ஒற்றுமையின்மையே காரணம்'' என்று அத்வானி அப்பட்டமாகக் கூறியிருந்தால் பொருந்தியிருக்கும். அத்துடன் வேறு பல காரணங்களும் உண்டு. நொண்டிச் சமாதானங்கள் நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளத்தான் உதவும்.

● நொண்டிச் சமாதானம்





● வேதனை வெளிப்பாடு

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

*? அ.தி.மு.க.-காங்கிரஸ் கூட்டணி ஏற்படுவது போன்ற தோற்றத்தை ஜெயலலிதா உருவாக்கியிருப்பதாக முதல்வர் கூறுகிறாரே?*

! அது முதல்வரின் கவனத்தையும் விமர்சனத்தையும் பெறுகிற அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைந்தது என்பதே ஜெ.வின் வெற்றிதானே!

● பா.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

*? ''சுப்ரீம் கோர்ட் நீதிபதியாக எனக்குப் பதவி உயர்வு அளிக்காததில் வருத்தமே... எனக்கு வாய்ப்பு மறுக்கப்பட்டது ஏன் என்பதை மக்களே முடிவு செய்யட்டும்'' என்று டெல்லி ஹைகோர்ட் தலைமை நீதிபதி ஏ.பி.ஷா வேதனைப்பட்டுள்ளது பற்றி...?*

! ஓய்வுபெறும் கட்டத்தில், அவர் மனம் திறந்து பேசியுள்ளதை வரவேற்கலாம். நீதிபதி நியமனங்களில் இன்னும் அதிகமான கவனமும், விருப்பு - வெறுப்பற்ற பரந்த மனப்பான்மையும், ஒளிவுமறைவற்ற அணுகுமுறையும் அவசியம் என்பதையே இது உணர்த்துகிறது.

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு ❐

*? கடுமையான நிதிப்பற்றாக்குறை நிலவும் சூழலில், கல்வி, கிராம மேம்பாடு உள்ளிட்ட துறைகளுக்கு 2007-08ல் மத்திய அரசு ஒதுக்கிய ஒரு லட்சத்து எட்டாயிரம் கோடி ரூபாய் செலவிடப்படாமலேயே உள்ளதாமே?*

! கிராமப்புற மேம்பாட்டுக்காக ஏற்கெனவே செலவழிக்கப்பட்ட பல்லாயிரம் கோடிகளால் எந்த அளவுக்கு கிராம மக்கள் பயனடைந்தார்கள்; எவ்வளவு கோடி இடையில் விழுங்கி ஏப்பம் விடப்பட்டது என்பதை ஆராய்ந்தால், நீங்கள் குறிப்பிடும் நிதி ஒதுக்கீடு செலவிடப்படாமல் போனதே நல்லது என்று தோன்றும்! அந்த அளவுக்குப் பண வீக்கம் குறைந்தது என்று மகிழலாம்!

❐ ரூ.150/- பரிசு பெறுபவர் :
பவானி கிருஷ்ணா, பெங்களூரு
★ ரூ.75/- பரிசு பெறுபவர் :
என்.பாலசுப்பிரமணியன், சென்னை - 40

மங்கையர் மலர் வாசகியரே!! திரளாக வருக! மாணவ சமுதாயமே!! திரண்டு வருக!

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

# பூஞ்சாரல்

ஆட்டம்... பாட்டம்... கொண்டாட்டம்... 2009- 2010

CINTHOL DEODORANT AND COMPLEXION SOAP

மாநில அளவில்... மிக பிரம்மாண்டமாய்...

விளையாட்டு மற்றும் கலைத்திறன் மண்டலச் சுற்றுப் போட்டிகள் நிறைவடைந்து...

## தஞ்சையில் மெகா இறுதிப் போட்டி...

**25** கல்லூரிகளுக்கும் மேல் பங்கேற்பு...

**500**க்கும் மேற்பட்ட மாணவர்களின் அசத்தல் அணிவகுப்பு...

**05.03.2010** (வெள்ளிக்கிழமை) & **06.03.2010** (சனிக்கிழமை)

இடம் : **A.V.V.M** ஸ்ரீ புஷ்பம் கல்லூரி, (தன்னாட்சி)

பூண்டி-613 503, தஞ்சாவூர் மாவட்டம்

நிகழ்ச்சி நேரம் :
காலை 9 மணி முதல்

பரிசளிப்பு விழா :
06.03.2010 மாலை 5 மணி அளவில்

சமையல், வாஸ்து புத்தகங்கள்தான் தமிழில் சக்கை போடு போடுகின்றன என்ற காலம் மலையேறிவிட்டது. இப்போது அந்த வரிசையில் சுயமுன்னேற்றப் புத்தகங்களும் இடம்பெற்றுள்ளன. 'கோடீஸ்வரர் ஆவது எப்படி? வியாபாரத்தில் வெற்றி பெறுவது எப்படி? நூற்றுக்கு நூறு மார்க் வாங்குவது எப்படி? இன்டர்வியூவை எதிர்கொள்வது எப்படி? எப்படி? எப்படி?' என்று ஏகப்பட்ட சுயமுன்னேற்றப் புத்தகங்கள் தினமும் மார்க்கெட்டில் வந்து குவிகின்றன. இப்படிப்பட்ட புத்தகம் தமிழுக்கு வந்து பத்து வருடங்களாகிவிட்டது. இன்னொரு பக்கம், விடுமுறை நாட்களில் நட்சத்திர ஹோட்டல்களில் நூற்றுக்கணக்கில், ஆயிரக்கணக்கில் கட்டணம் வாங்கிக்கொண்டு நடத்தப்படும் சுயமுன்னேற்றப் பயிலரங்குகள். மொத்தத்தில் பணம் கொடுத்துப் புத்தகம் வாங்குகிறவர்களும், பயிலரங்குகளுக்குப் போகிறவர்களும் பயன்பெறுகிறார்களோ இல்லையோ, பதிப்பாளர்கள் மற்றும் பயிலரங்குகள் நடத்துகிறவர்கள் மேலும் மேலும் பணக்காரர்களாவது நிச்சயம்.

இது சம்பந்தமாக ஒரு அடிப்படைக் கேள்வி: அந்தக் காலத்தில் ஒரு அரிச்சந்திர நாடகம் காந்திஜி, மகாத்மா ஆவதற்கு அடித்தளம் அமைத்திருக்கலாம். ஆனால் இன்றைய வர்த்தக உலகில் ஒரு புத்தகம், ஒரு மனிதனின் வாழ்க்கையில் பெரிதாக என்ன மாற்றத்தை ஏற்படுத்திவிடும்?

இதற்குப் பதிலளிக்கிறார் ஏராளமான சுயமுன்னேற்றப் புத்தகங்கள் எழுதியிருக்கும் எழுத்தாளர் மெர்வின்: ''ஆபிரகாம் லிங்கன் படித்த ஜார்ஜ் வாஷிங்டனின் வாழ்க்கை வரலாறு, அவரது மனத்திலே பெரும் புரட்சியை ஏற்படுத்தி, அவரை அமெரிக்க ஜனாதிபதி சிம்மாசனத்திலேயே அமர வைக்கவில்லையா? எம்.எஸ். உதயமூர்த்தியின் எண்ணங்கள் என்ற புத்தகம் எத்தனை ஆயிரம் பேர் வாழ்க்கையில் தாக்கத்தை ஏற்படுத்தி இருக்கிறது தெரியுமா? ஒரு நூல் நிலையத்தைத் திறந்தால், ஒரு சிறைச்சாலையை மூடலாம் என்ற சுவாமி விவேகானந்தரின் வாக்கு எத்தனை அர்த்தமுள்ளது?'' என்று கேட்கிறார் மெர்வின்.

# சுயமுன்னேற்றம் - சூப்பர் பிசினஸ்!

''உலகின் எந்த நாட்டைச் சேர்ந்தவராக இருந்தாலும், மனிதர்களில் பெரும்பாலானவர்கள், குறைபாடுகள் உடையவர்கள்; சாப்பாட்டுக்கு வழி இல்லாத ஏழை முதல் உலகின் மாபெரும் கோடீஸ்வரர்கள் வரை அனைவருக்கும் ஒவ்வொருவிதமான கவலை; ஒவ்வொரு விதமான பிரச்னை; அனைவருக்கும் வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற துடிப்பு இருக்கிறது; நிறைய சம்பாதிக்க வேண்டும்; சௌகரியமாக வாழவேண்டும் என்று ஆசை இருக்கிறது; அதற்கு என்ன வழி என்று தேடுகிறார்கள்; சுயமுன்னேற்றப் புத்தகங்கள் அவர்களுக்கு வழிகாட்டும் என நம்புகிறார்கள். எனவே, அத்தகைய புத்தகங்களை வாங்கிப் படிக்கிறார்கள்'' என்கிறார் சுயமுன்னேற்ற நூல்களை வெளியிட்டு வரும் கிழக்கு பதிப்பகத்தின் பத்ரி சேஷாத்ரி.

''மக்கள் சுயமுன்னேற்றப் புத்தககங்கள் வாங்குவதற்குச் செலவிடும் பணத்தை செலவாக நினைப்ப









தில்லை; தங்கள் முன்னேற்றத்துக்கான முதலீடு என்றே நினைக்கிறார்கள்'' என்கிறார் ஆங்கில சுய முன்னேற்ற நூல்கள் பலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுவதில் முன்னோடியான கண்ணதாசன் பதிப்பகத்தின் காந்தி கண்ணதாசன். ''என்னைப் பாதித்த ஆங்கிலப் புத்தகங்களை தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டால் ஆயிரக்கணக்கான தமிழ் மக்கள் பயனடைவார்களே என்று நினைத்து அதை செயல்படுத்தினேன்'' என்கிறார் காந்தி கண்ணதாசன்.

**கோ**வையில் தன்னம்பிக்கை என்ற மாத இதழின் ஆசிரியரான மரபின் மைந்தன் முத்தையா, பல சுயமுன்னேற்றப் பயிலரங்குகளையும் நடத்தி வருகிறார். தனி மனிதப் பிரார்த்தனையை விட கூட்டுப் பிரார்த்தனைக்கு சக்தி அதிகம் என்ற நம்பிக்கையைப் போலவே, தனி மனிதர் ஒருவர், புத்தகங்களைப் படித்து தம்மை உயர்த்திக்கொள்வதைவிட, வாழ்க்கையில் முன்னேறத் துடிக்கும் பலர் ஒரு பயிலரங்கத்தில் கலந்துகொள்கிற போது, உற்சாகமும், லட்சிய வெறியும் அனைவரையும் பற்றிக் கொள்கின்றன. அங்கே ஏற்படும் பாசிடிவான வைப்ரேஷன்களுக்கு நிச்சயம் பலன் உண்டு'' என்கிறார் முத்தையா.

அமெரிக்காவில் குடியரசுத் தலைவருக்கு மனச்சோர்வு ஏற்படும் தருணங்களில், அவருக்கு உற்சாகமூட்டுகிற பணியை செய்வதற்கென்றே ஒரு வல்லுநர் இருப்பாராம். ஆக அமெரிக்க அதிபர் தொடங்கி, எளிய தொழில் முனைவோர் வரை அனைவருக்குமே சுயமுன்னேற்ற யுக்திகள் அவசியமாகின்றன.

'**இ**ன்று சுயமுன்னேற்றப் புத்தகங்கள் வெளியிடுவதும், பயிலரங்குகள் நடத்துவதும் பணம் பண்ணும் பிஸினஸாகி விட்டதாக எழும் குற்றச்சாட்டு குறித்துக் கேட்டபோது, அனைவரும் சொன்ன பதிலின் சாரம் இதுதான்: ''நாம் இவ்வளவு செலவு செய்தால் நமக்கு என்ன பலன் கிடைக்கும் என்று பலமுறை யோசித்து, இன்ன பலன் நமக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கை ஏற்பட்ட பிறகே ஒருவர் புத்தகம் வாங்கவோ, பயிலரங்கத்தில் பயிற்சி பெறவோ முன்வருகிறார். அவர் எதிர்பார்ப்பு பூர்த்தி செய்யப்படவில்லை என்றால், அடுத்த முறை புத்தகம் வாங்க மாட்டார்; பயிற்சிக்குச் செல்ல மாட்டார். பயிற்சியாளர்களும், எழுத்தாளர்களும் புத்திசாலிகள்; ஆனால் வாசகர்கள் அவர்களைவிட சாமர்த்தியமானவர்கள்.''

**- எஸ். சந்திரமௌலி**

# கிறு கிறு போலீஸ்..



**வ**ண்ணாரப்பேட்டையைச் சேர்ந்த ராஜ்குமாருக்கு சிறு வயதிலிருந்தே போலிசில் சேரவேண்டுமென்று துடிப்பு. சென்னையில் நடக்கும் கபடிப் போட்டி களையும் விரும்பிப் பார்ப்பார். அப்போ தெல்லாம் டீ-ஷர்ட், ட்ராக் சூட்டுடன் இருபத்தைந்து வயது மதிக்கத்தக்க ஒரு பெண்மணி பயிற்சியின்போது மைதா னத்தில் அங்கேயும் இங்கேயும் போய்க் கொண்டும், முக்கிய விருந்தினர்களாக வந்திருக்கிற காவல் துறை அதிகாரி களிடம் சகஜமாகப் பேசிக்கொண்டும் இருப்பதைப் பார்ப்பார். அந்தப் பெண்ணின் டீ-ஷர்ட்டில் 'போலீஸ் அகடமி என்ற முத்திரை வேறு!

''ஏதோ ஐ.பி.எஸ். அதிகாரியாக இருக் கக்கூடும்'' என்று நினைத்தார். அடுத்த முறை அவரை ஒரு மைதானத்தில் சந்தித்தபோது, 'தனக்குக் காவலர் ஆகும் ஆசை இருப்பதாகத் தெரிவித்தார். ''ஒன்றரை லட்ச ரூபாய் கொடுத்தால் உனக்கு வேலை நிச்சயம்'' என்று சொன்னார் அந்தப் பெண்.

அடுத்த சில நாட்களில், அங்கே இங்கே புரட்டி ஒன்றரை லட்சத்தை அந்தப் பெண்ணிடம் கொடுத்து, ''என்ன மேடம்... முடியுமா?'' என்று தயக்கத்துடன் கேட்டார் ராஜ்குமார். ''இந்த சௌதாமணி நினைச்சா முடியாத காரியமே கிடையாது தெரி யுமா?'' என்று சவால் விடும் தொனியில் சொன்னார் அந்தப் பெண். ''மேடம்... உங்களை 'சாருலதா' என்கிறார்களே...'' என்று ராஜ்குமார் கேட்டபின், ''அது கூப்பிடுற பேரு'' என்றார் அவர். அடுத்த இருபது நாட்களில், ஒரு கால் லெட்டரைக் காட்டினார் சாருலதா. ''பார்த்தியா... உனக்கு அழைப்பு வரப்போகுது'' என்று சொல்லிவிட்டு, அவரே அதை வைத்துக் கொண்டார். ''என்ன மேடம் நீங்களே அந்த லெட்டரை எடுத்துட்டுப் போறீங்க?'' என்று ராஜ்குமார் கேட்டவுடன், ''உனக்குத் தபாலில் வரும்'' என்றவாறு போலீஸ் அட்டையைத் தாங்கிய சிவப்பு கொண்டை ஃபோர்டு காரில் ஏறிக் கிளம்பினார் சாருலதா.

இரண்டு மாதங்கள் ஆயின; ஒரு தகவலும் இல்லை. சந்தேகப் பொறி தட்டியது ராஜ்குமாருக்கு. சாருலதாவிடம் கேட்டதற்கு, 'மிரட்டல்' குரலில் பேசினார் அவர். வெறுத்துப் போன ராஜ்குமார் காவல்துறையிடம் புகார் கொடுத்து விட்டார்.

இதே ரீதியில் சுமார் பத்து லட்சம் ரூபாய் கலெக்ட் செய்து, பந்தாவாக வாழ்க்கையை நடத்திய சாருலதா, இப்போது சிறை சோறு சாப்பிடுகிறார்!

**சா**ருலதாவுக்குச் சொந்த ஊர் திருவண்ணாமலையை அடுத்த செங்கம். அம்மா பூ வியாபாரம். அப்பா கிடையாது. சென்னையில் ப்ளஸ் டூ வரை படித்திருக்கிறார். அத்லடிக் போட்டிகளில் ஆர்வம் உண்டு. அங்கே வரும் பெரிய போலீஸ் அதிகாரி களுக்குக் கிடைக்கும் மரியாதையையும்

கௌரவத்தையும் பார்த்து 'போலி' அதிகாரியாக உலாவரத் தொடங்கினார். போலீஸ் அதிகாரிகளிடம், தாம் ஒரு 'கபடி பயிற்சியாளர்' என்று அறிமுகப்படுத்திக் கொண்ட சாருலதா, மற்றவர்களிடம் தம்மை 'போலீஸ் அதிகாரி' என்று சொல்லிக்கொண்டார். காவல் அதிகாரி ஒருவர் சாருலதாவிடம் கொஞ்சம் நெருக்கமாகப் பழகவே, அவரது 'போலித் தன்மையை' மறைக்கவும், வேலை வாங்கித் தருவதாக ஏமாற்றவும், அந்த 'நெருக்கம்' வசதியாகப் போய்விட்டது. ''ஏன் ஸார் கேக்கறீங்க... வெட்கமா இருக்குது. அந்தப் பெண் இப்படி எல்லோரையும் ஏமாத்திட்டாங்களே'' என்கிறார் கபடி பயிற்சியாளரும், 'கபடி ஸ்டார்' பத்திரிகை ஆசிரியருமான ராஜேந்திரன். ''அது ராணி மேரிக் கல்லூரியில் படித்தது என்பதெல்லாம் பொய். கபடிக்கும் அந்தப் பெண்ணுக்கும் சம்பந்தமே இல்லை. ஆனா நாங்க நடத்தற கபடிப் போட்டிக்கு படு அமர்க்களமாய் 'போலீஸ்' என்று ஃபோர்ட் காரில் வந்திறங்கும்'' என்கிறார் ராஜேந்திரன்.

சாருலதா வீட்டை சோதனை நடத்திய போது, ''சௌதாமணி, உதவி துணை ஆணையர்'' என்ற போலீஸ் அடையாள அட்டை, ஐ.பி.எஸ். காவல் அதிகாரி உடை ஆகியவை அகப்பட்டன. வேடிக்கை என்னவென்றால், காவல் துறையில் 'உதவி துணை ஆணையர்' என்ற பதவியே கிடையாது! இந்த ஐ.பி.எஸ். சீருடை சாருலதாவுக்குக் கிடைத்தது எப்படி? காவல் துறையினரின் சீருடையைப் பொறுத்த வரை காலிலிருந்து தலைவரை எல்லாப் பொருட்களையும் விற்பதற்கு சென்னையில் கடைகள் இருக்கின்றன. பெரிய மேட்டில் கடை வைத்திருக்கும் தியாகராஜன், ''எங்க வாடிக்கையாளர்கள் 99 சதவிகிதம் காவல் துறையினர்தான். அவர்களது இலாகாவில் கொடுப்பதில் திருப்தி இல்லாமல் இருப்பதால் எங்களிடம் வாங்குகிறார்கள்.



● சாருலதா

# ...கில்'லேடி' ஐ.பி.எஸ்!

சந்தேகம் ஏற்பட்டால் அடையாள அட்டை காட்டச் சொல்லி பின்னரே விற்போம். சினிமா காஸ்ட்யூமர்களும் ஐ.டி. காட்டித்தான் வாங்கிப் போவார்கள்'' என்கிறார். சென்னையில் டீ-ஷர்ட், ஜீன்ஸ் என்று வலம் வந்த சாருலதா, வெளியூர்களுக்குச் செல்லும்போது, 'சீருடை' அணிந்து கொள்வாராம்.

''எங்களிடம் போலீஸ் அதிகாரி என்று சொல்லிப் பழகியிருந்தால் இரண்டு விநாடிகளில் போலித்தனம் அம்பலம் ஆகியிருக்கும். பொது மக்களுக்கு நாங்கள் சொல்வது என்னவென்றால், காவல் துறையில் பணி நியமனம் பெற பல படிகள் தாண்ட வேண்டும். அது தனி ஒரு நபர் தீர்மானிக்கும் விஷயமல்ல. குறுக்கு வழியில் முயன்று ஏமாறாதீர்கள்'' என்கிறார் உதவி ஆணையர் குமார்.

- ஸ்ரீநி

**ஸ்ரீ லலிதா**

**நான்காம் பாகம்**

# பூத்தவண்ணம் காத்தவள்!

**வீ**ணை தந்திக் கருவி - அந்தத் தந்தியிலிருந்து வரும் ரீங்காரம் சற்று நேரம் நீடிக்கும். அதனை உடனே நிறுத்த வேண்டுமானால் டக்கென்று உறையைப் போட்டு ஓர் அமுக்கு அமுக்கினால்தான் ஓசை அமுங்கும்; இல்லாவிட்டால் ரீங்காரம் நீடிக்கும். அத்தனை அவசரமாக தன் இசையை நிறுத்தினாளாம் சரஸ்வதி.

சரி, அம்பாள் எதற்காக அப்படி சபாஷ் சொல்லி ரசித்தாளாம்..?

அம்பாளின் முன்னிலையில் சரஸ்வதி வீணை மீட்டியபடி விதவிதமான கீர்த்தனைகளைப் பாடுகிறாள். யாரைப் பற்றிய கீர்த்தனைகள் என்றால், பரமேசுவரனைப் பற்றிய கீர்த்தனைகள். அம்பாள் அவற்றை ரசித்ததற்குக் காரணம் அந்த இசையின் நுட்பம் மட்டும் அல்ல... அவை பரமேசுவரனைப் பற்றிய பாடல்கள் என்பதாலேயே ஆழ்ந்து ரசிக்கிறாள். இதை பாரதியார் நன்கு புரிந்துகொண்டவர் என்பதால்தான் அம்பாளின் செவிகளில் தேன் பாய்ந்ததை உணர்ந்திருக்கிறார். அதையே செந்தமிழ் நாடு குறித்துப் பாடியிருக்கிறார்:

'செந்தமிழ் நாடென்னும் போதினிலே,
இன்பத் தேன்
வந்து பாயுது காதினிலே' என்பதாக.

'எங்கள் அம்மாவைப் பற்றிப் பாடினால் அது தேன்; ஆனால், எங்கள் அம்மாவுக்கு எது மிகவும் பிடித்தமானது தெரியுமா...? தந்தையர் நாடு என்று சொல்வதே அம்மாவுக்குப் ப்ரீதியானது..' என்று பாரதியார் கருதி அடுத்த வரியை, 'எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே' என்று எழுதியிருக்கிறார்!

பரமேசுவரியான அம்பிகைக்கு, தான் சதியாக இருப்பதே பிடித்திருக்கிறது. இதைத்தான் **'சதீ'** என்ற திருநாமம் உணர்த்துகிறது.

**ப்ரஹ்மாணீ** - பிரம்மாவுக்கு உயிர்ப்பைத் தரக்கூடியவள். சிருஷ்டிகர்த்தாவான பிரம்மாவுக்கு அவரது ஆற்றலை வழங்குகிறவள்.

**ப்ரஹ்ம** - அவளே பிரம்மாவாகவும் இருப்பவள். முன்பே **பிரம்ம ரூபிணீ** என்கிற திருநாமம் வந்தது. சிருஷ்டியை, படைத்தலைச் செய்யக்கூடியவள் என்று பொருள். அதனால்தான் 'பூத்தவளே' என்றும் 'உலகம் பதினான்கையும் பூத்தவண்ணம் காத்தவளே' என்றும் அபிராமி பட்டர் பாடுகிறார். பூத்தவளே! 'படைத்தவளே' என்று சொல்லாமல் பூத்தவளே என்றது எதனால்..? தன்னிடத்திலிருந்து பூமியை, அண்டத்தை, மலரச் செய்தவள் என்பதால். அவள் முயன்றுகூட சிருஷ்டிக்கவில்லை. சிருஷ்டியானது அவளிடமிருந்து இயல்பாக வெளிப்பட்டது. எவ்வாறு மலரச் செய்தாளோ அவ்வாறே மலர்ந்தவை அனைத்தையும் காக்கவும் செய்கிறாள்.

## மென்மையும் மலர்ச்சியும்

**20**

**ம**லர் என்பது மிக மென்மையானது. மலர்தல் என்கிற காரியமும் மிருதுவானது. எந்தப் பூவானாலும் சரி, எத்தனை தலைமுறைகள் சென்றாலும் சரி, நவீன தொழில்நுட்ப

**சுதா சேஷய்யன்**

மாற்றங்கள் உண்டானாலும் சரி... மென்மையான மலர்ச்சி என்பது மாறுவதில்லை. அம்பாளும் அதேபோல்தான்; சிருஷ்டியில் அனைத்தையும் மலர்த்துகிறாள். எவ்வளவு மென்மையாக, பார்த்துப் பார்த்து மலர்த்துகிறாளோ, அவ்வளவுக்கு அவளே அவற்றைப் பார்த்துப் பார்த்துக் காப்பாற்றுகிறாள்!

**ஜனனீ** - தாயாக இருப்பவள். பிரஹ்மா என்ற படைத்தல் திருநாமத்துக்கு அடுத்தே **ஜனனீ** என்பது வருவதும் பொருத்தம். ஒரு தாய் குழந்தையின் சிருஷ்டிக்குக் காரணமாக இருப்பதோடு நின்றுவிடுவதில்லை. அவளே அக் குழந்தையைக் காப்பாற்றுகிறாள். அதனால்தான் 'பூத்தவளே' என்பதை அடுத்து, 'பூத்தவண்ணம் காத்தவளே' எனப் பாடியுள்ளார் அபிராமி பட்டர்.

**பஹுரூபா** - எல்லாம் தாண்டி, பலவிதமான ரூபங்களில், வடிவங்களில் இருக்கக் கூடியவள்.

## ஞானிகளின் வழிபாடு!

**புதஅர்ச்சிதா** - புதனால் அர்ச்சிக்கப்படக்கூடியவள். ஜாதகத்தில் புதன் பலமாக இருந்தால் ஞானவான்களாக இருப்பார்கள் என்று ஜோதிஷம் சொல்லும். புதன் என்று சொன்னாலே, ஞானவான் என்றுதான் அர்த்தம். புதனை ஞானாகரன் என்றும் சொல்வதுண்டு. ஞானிகளால் அர்ச்சிக்கப்படக்கூடியவள். அம்பிகை என்றும் இந்தத் திருநாமத்துக்குப் பொருள் கொள்ளலாம்.

**பிரசவித்ரீ** - எல்லாவற்றையும் பிரசவிக்கக் கூடியவள்; படைக்கக்கூடியவள்; உருவாக்கக்கூடியவள்.

**பிரசண்டா** - மிகுதியான கோபம் கொண்டவள். **சண்டா** என்ற திருநாமத்தை ஏற்கெனவே பார்த்தோம். **பிரசண்டா** என்றால் அதிகமான கோபம்! தவறோ கொடுமையோ நடந்தால் அதற்காக அதிகமாகக் கோபப்படக்கூடியவள். 'நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும் நிறைந்த சுடர்மணிப் பூண்...' என பாரதியார் பாடினாரே! நீதி தவறினால் அந்த வாளைப் பிரயோகிக்கக் கூடியவள்.

**ஆக்ஞா** - ஆக்ஞையிடக் கூடியவள். எல்லாவற்றையும் தன் ஆணையினால் நிர்வகிக்கக் கூடியவள்.

**பிரதிஷ்டா** - சர்வ இடங்களிலேயும் சர்வ நிலைகளிலேயும் பிரதிஷ்டையாகி இருப்பவள். எல்லா இடத்திலேயும் அவள் ஆவாஹனமாக இருக்கக்கூடியவள். தனது அம்சத்தை, ஆற்றலைக் கொண்டுவந்து அந்த இடத்திலே நிலைப்படுத்துவது என்பது அம்பிகையின் இயல்பு.

**பிரகடாக்ருதீ** - நல்ல அனுபவங்களைத் தரக்கூடியவள். நல்ல அனுபவங்களின் மூலமாக அம்பாளை உணரலாம்.

**பிராணேசுவரீ** - பிராணன்களுக்கெல்லாம் தலைவி.

பிரகடாக்ருதீ என்றால் நல்ல அனுபவங்களைத் தரக்கூடியவள் என்பது பொருள்

## ஐந்து பிராணன்கள்

**பிராண தாத்ரீ** - பிராணனைத் தரக்கூடியவள். பிராணன்தான் ஜீவனை உயிர்ப்புடன் வைத்திருக்கிறது. பஞ்ச பிராணன் என்றே இருக்கிறது. அதைப் பற்றியும் பின்னால் பார்ப்போம். 51 தத்துவம் என்று வகுக்கும் முறையில், பிராணன் ஐந்து வகை என்று கணக்கு வரும். இந்தப் பிராணன்களையெல்லாம் தரக்கூடியவள் **பிராண தாத்ரீ**. ஜீவன்களான உயிர்களை இதன் மூலம் உயிர்ப்புடன் வைத்திருக்கிறாள் அம்பிகை.



## பட்டும் பாட்னாவும்!

**பஞ்சாசத்பீடரூபிணி** - ஐம்பது பீடங்களின் வடிவில் இருப்பவள். ஐம்பது என்று குறிப்புக்குச் சொன்னாலும், உண்மையில் 51 சக்தி பீடங்களையே இந்தத் திருநாமம் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். 51 மாத்ருகா பீடங்கள் உள்ளன அல்லவா...? அவற்றில் நிலை பெற்று இருக்கக் கூடியவள். தாக்ஷாயணி ஸ்வரூபத்தின் உடல் பாகங்கள் எங்கெல்லாம் விழுந்தனவோ, அங்கெல்லாம் மாத்ருகா பீடங்கள் உருவாகின என்பதை ஏற்கெனவே பார்த்தோம். பல ஊர்களை நாம் மாத்ருகா பீடங்களாகப் பொருத்திப் பார்ப்பதில்லை. சில சமயங்களில் ஊர்ப்பெயர் மருவி மாறி விடுவதாலும் அது சக்தி பீடம் என்பது நமக்குத் தெரிவதில்லை. உதாரணமாக, பாட்னா. படன் தேவியுடைய திருநகரம்தான் பாட்னா. அங்கே இரண்டு கோயில்கள் - படி படன் தேவி, சோடி படன்தேவி என்று உண்டு. பாட்னா என்று சொல்கிறபோது, வரலாற்றில் பாடலிபுத்ரமாக இருந்த ஊர் என்பது மட்டும்தான் நாம் பாடத்தில் படித்துத் தெரிந்து கொள்கிறோம். அதுவே பாட்னா என்று சுருங்கிப்போனதாகக் கருதிக் கொள்கிறோம். ஆனால், பாட்னா என்பது படன் தேவியினால் உருவான பெயர்.

அபிராமி பட்டர் பாடுகிறபோது, 'ஒல்கு செம்பட்டு உடையவள்' என்பார். அவள் உடல் சிதறியபோது, அவள் உடுத்தியிருந்த செம்பட்டு எங்கு தெறித்து விழுந்ததோ அந்த இடம்தான் பாட்னா. பட்டு என்று அந்தத் துணி வகையை நாம் சொல்வதும் படன்தேவி என்கிற அம்பிகையின் பெயரையொட்டித்தான்.

இவ்வாறு 51 சக்தி பீடங்களின் ரூபிணியாக ஸ்ரீ லலிதாம்பிகை விளங்குகிறாள்.

**(வளரும்)**

# வட்டமேஜை

கல்கியின் புண்ணியத்தில் மலேசியப் பயண வாய்ப்புக் கிடைத்தது மாதிரி இருந்தது.

- பா.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

அடுத்து ஏதாவது மாவட்டத்துக்கு போவீங்கன்னு பார்த்தா கபால்னு ஃபிளைட் பிடிக்க மலேசியா போய்க் கலக் கிட்டீங்களே வாத்தியாரே.

- எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

பட்ட கடனைத் தீர்க்க மலேசியாவில் அல்லாடும் தமிழனின் அவலநிலையைப் படித்து மனம் வெதும்பினோம்.

- தா.ஆசீர்டேவிட், நாகர்கோவில்-1

புத்திக்கும் மேலான 'அன்பு-யாக'த்தே விளைவதுதான் அசல் நியாகம் என்பதற் கான காஞ்சிப் பெரியவரது வியாக்யானம் 'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்' எனும் குறளியத்தை நினைவுபடுத்துகிறது!

- 'இனாம்'கேசவன், குருமலை

கதிர்பாரதியின் கற்பனைத் தோட் டத்தே மலர்ந்த நால்வகைப் பூங்கவிதை களது நறுமணம் நெஞ்செல்லாம் படர்ந்த நல்லுணர்வில் கிறங்கிப் போனேன்!

- ச.ஆ.கேசவன், இனாம்மணியாச்சி

கதிர்பாரதி கவிதைகள் அனைத்தும் கருத்தைக் கவரும்விதத்திலான, கல்கிக்குப் பெருமைசேர்க்கும் வகையிலான சூப்பர் கவிதை பகுதி!

-ஏ.பி.எஸ்.
ரவீந்திரன், வள்ளியூர்



விளையாட்டை விளையாட்டாக எடுத்துக் கொள்ளக்கூடாது என்பதை விரி வாக விளக்கியிருந்தீர்கள் அருமை!

- சி.விஜயாம்பாள்,
கிருஷ்ணகிரி

மலேசியா பற்றிய துணுக்குகள் ஒவ் வொன்றும் எங்களை மலைக்க வைத்து விட்டது.

- தனுஸ்ரீ, முனியங்குறிச்சி

கழகக் கட்சிகளின் எதிர்த்தாக்குதல் கார்ட்டூன் காட்சி செம கலாட்டா!

-எஸ்.ஆர்.ஹரிஹரன், சென்னை-109

'கட்-அவுட்' கலாசாரம் குறித்த கேள்விக்குக் கச்சிதமாகப் பதில் தந்திருந்த

சந்திரமௌலி



**கல்கியில் இவ்வளவு மாற்றம் வந்திருக்கா? நான் இப்போதான் பார்க்கிறேன். மலேசியா சிறப்பிதழ் ரொம்ப அருமையா வந்திருக்கு. யாருங்க அந்த சந்திரமௌலி? அவருக்குப் பாராட்டுக்கள்.**

**- புதிய வாசகி எல்.லதா, கொடுங்கையூர்.**

# கடல் கடந்து கலக்குறீங்க!



தராகவிற்கு அண்ணா சாலையில் ஒரு கட்-அவுட் வைக்கத்தான் வேண்டும்.

-ப.கோபிபச்சமுத்து,
கிருஷ்ணகிரி-1.

**சு**யமரியாதையும், தன்மானமும் உள்ள ஒரு எழுத்தாளன் மறந்து போன மந்திரியின் பொன்னாடையைக் கேட்பதைப் போன்ற ஏ.எ. ஹெச்.கே. கோரியின், 'எங்கேயோ போகவிருந்தவர்கள்' சிறுகதையின் முடிவை ஏற்றுக்கொள்ள இயலவில்லை.

-ஜெமினி, சென்னை-5.

'**ரோ**ஜாவைக் காதலிக்குக் கொடு; மல்லிகையை மனைவிக்குக் கொடு' என்ற மலேசியப் பழமொழியை தலைப்பில் அப்படியே மாற்றி விட்டீர்களே! ரோஜாவையே காதலியாகவும், மல்லிகையையே மனைவியாகவும் காட்டிவிட்டதே தலைப்பு!

- அய்யாறு எஸ்.வாசுதேவன்,
சென்னை-91



**ஊ**ருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோயில் ஆண்டி என்பது போல் வட்டமேஜையைப் பாதியாகக் குறைத்து வாசகர்கள் தலையில் கை வைத்து விட்டீர்களே! பக்கங்கள் பற்றாக்குறைக்கு எங்கள் பகுதியைத்தான் பலிகடா ஆக்க வேண்டுமா?

- பி.ஆர்.மயிலப்பன்,
ஈரோடு

## இதனால் சகலமானவர்களுக்கும் அறிவிப்பது...

**பா**ராட்டி, திட்டி, குட்டி, மிரட்டி (செல்லமா!) எவ்வளவோ கடிதங்கள் வருது வட்டமேஜைக்கு... இவங்களுக்கெல்லாம் என்ன செய்யலாம்னு ஃபீலிங் கார்னர்ல உட்கார்ந்து ஒருநாள் யோசிச்சோம். சின்ன ஐடியா ஸ்பார்க் ஆனது. உடனே ப்ளானிங் கமிஷன் வைச்சு பில்ட் அப் செஞ்சோம். இதாங்க அந்த ஐடியா:

'இதனால் சகலமானவருக்கும் தெரிவிக்கப்படுவது என்னவென்றால், 21.03.2010 முதல் கல்கி வட்டமேஜை பகுதியில் இடம்பெறும் கடிதங்களில் சிறந்த கடிதம் எழுதி அனுப்பிய ஒரு வாசகருக்கும், ஆன்லைனில் (www.kalkionline.com) சிறந்த கடிதம் பதிவுசெய்யும் ஒரு வாசகருக்கும் தலா ரூ.250 மதிப்புள்ள கிழக்கு பதிப்பகம் வழங்கும் புத்தகங்கள் பரிசாக அளிக்கப்படும். எல்லாப் பகுதிகளும் படிங்க... நல்ல நல்ல விமர்சனங்களைக் கொடுங்க...'

# கல்கி

**எக்ஸ்ரே பார்வையில் Exclusive செய்திகள்**

**14.03.2010, 21.03.2010 இதழ்கள்...**

- → முண்டந்துறை புலிகள்!
- → தாமிரபரணி திருத்தலங்கள்
- → அல்வாவில் இனிக்கும் ரகசியங்கள்!
- → செங்கோட்டை கமகம பிரியாணி
- → கிறங்கடிக்கும் கிருஷ்ணாபுரம்!

- நொறுங்கும் அப்பளத்தொழில் ←
- நெல்லையப்பர் நல்லாட்சி ←
- தென்காசி ஆசாரம் திருநெல்வேலி உபசாரம் ←
- தென்னகத்தின் ஆக்ஸ்ஃபோர்டு ←




**உடனே முந்துங்கள்... உங்கள் பிரதிகளுக்கு...**

# புற்றுநோய்க்கு ஒரே இடத்தில் தீர்வு!

## ONE STOP SOLUTION FOR CANCER



- PET CT SCAN
- All Endoscopies
- Linear Accelerator & Brachy Therapy
- Radiation
- IGRT
- Surgical Oncology
- Medical Oncology

- பெட் சீடி ஸ்கேன்
- அனைத்து என்டோ ஸ்கோபி
- கதிர்வீச்சு
- லீனியர் ஆக்ஸிலரேடர் & உட்கதிர்வீச்சு
- IGRT
- புற்றுநோய் அறுவை சிகிச்சை
- புற்றுநோய் மருத்துவம்

இலவச ஆலோசனைக்கு:

**(044) 2246 9200**
**(044) 66 300 300**

PET CT CENTRE AT CANCER INSTITUTE (WIA)
CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR, CH-20

24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE

# Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL

# 1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Ph: 2246 9200, 66300300 Fax : 22463282 66300400
E-mail: info@drkamakshimemorialhospital.org.
Website: drkamakshimemorialhospital.org.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.

**மார்ச் மாதம் வந்துவிட்டது**

**சம்பாவில் தள்ளுபடி விற்பனை**

**ஆரம்பமாகிவிட்டது**

CHAMPA

# சம்பாவின்

# புதிய வரவுகள்



01.03.2010 முதல்
31.03.2010 வரை

**30%** தள்ளுபடி
குறிப்பிட்ட ரகங்களுக்கு

**20%** தள்ளுபடி
சல்வார் செட்களுக்கு

**10%** தள்ளுபடி
மற்ற ரகங்களுக்கு



'கிராண்ட் லுக்'
ஜரிகை வேலைப்பாடுடன்,
வண்ணமயமான
புடவைகளின் ஆலயம்

**சம்பா!**



திருமணம் போன்ற எல்லா சுபகாரியங்களுக்கும்
நாள் முழுவதும் சம்பாவின் பட்டோ என்று
எல்லோருக்கும் வியக்கும் காட்டன்
புடவைகளை அணிந்து கொண்டாடுங்கள்,
**Grand look Salwar Kameez**-களும் உள்ளன.

சம்பாவிற்கு வாருங்கள்.

**Timings : 11 a.m to 1 p.m. and 3 p.m. to 8 p.m | Sunday Holiday | Visa, Master & BOB Cards Accepted**

**# 5, 3rd Street, Abiramapuram, Chennai - 600 018. Tel : 2499 6907**